கார்மாரிபொழிவளமுங்கால்வாயினொடுவளமும்
ஏருருநிலவளமுமிணையில்பலபயிர்வளமும்
ஊர்வளமுங்குடிவளமுமுலவாதபொருள்வளமும்
சார்வல்லத்திருப்பதிவாழ்சடையீசரடிபோற்றி. ௧

செந்நெலார்வளமல்குசெழும்பழனத்துறைவாய்த்து
கன்னல்கழுகெழிலோங்கக்கமலமலர்த்தடஞ்சூழ
மன்னியவானொடிதோங்குமணித்திருக்கோபுரத்தமர்ந்த
தன்னிடமார்ஜெயனும்பாள்சடையீசரடிபோற்றி ௨

முத்துமணியலைவாரிமோதுகரையேரிகளும்
சத்துபணிலங்கள்செறிதடம்புடைசூழ்சோலைகளும்
நத்திவரும்பலபரவைநாதமுயர்கீதமொடு
சத்திவல்லப்பதியமருஞ்சடையீசரடிபோற்றி ௩

தும்புருநாரதர்யாழிற்றொடுத்தரியநெடும்புகழை
உம்பர்மனங்களிதுளங்கவோயாதின்னிசைபாட
அம்பரத்திலலர்மாரியகலாதுமணம்வீச
இம்பர்வல்லப்பதியமருமெழிற்சடையாரடிபோற்றி ௪

பத்திமிகுந்தொண்டர்குழாம்பலபாடற்றுதிசெய்ய
சித்தமலரடிவைத்துச்செகமுழுதும்பணிந்தேத்த
வைத்தபெருங்கருணையினால்வாழ்வித்துச்சகமளிக்கும்
சத்திஜெயனும்பிகைபாற்சடையீசரடிபோற்றி ௫

கஜாசுரனைத்தடிந்தருளுங்கணபதியாரொருபாலும்
அஜாடனுகந்தமார்சிறையகற்றியவேளொருபாலும்
நிஜானந்தம்பெறுமுனிவர்நிமலசிவகணஞ்சூழத்
துவிஜாருறைவல்லத்தமருஞ்சூழ்சடையாரடிபோற்றி ௬

மலரயனுமன்னமதாய்வான்பறந்துமுடிதேடி
நிலமேவியேனமதாய்நெடுமாலுமடிதேடி
பலகாலுமுழன்றிளைத்துப்பரிந்துதொழப்பேரருளால்
நலமேல்வல்லத்தமர்ந்தசடையீசரடிபோற்றி. ௭

மழவிடைமேலெழுந்தருளிவான்பணியவுலகேத்த
இழைமருங்குற்றையலும்பாளிடத்தமருந்திருக்கோலம்
தொழுவரியதவஞ்செய்தோஞ்சுகமடையவினிதருள்வார்
செழியதிருவல்லத்திற்றிருச்சடையரடிபோற்றி. ௮

திங்களணிமணிமுடியிற்செறிகங்கையலைவீச
பொங்குமழுமான்கரத்திற்பொலிந்திருபாலசைந்தாட
தங்குமிருகரமபயவரதமொடுதாண்டவஞ்செய்
எங்கள்வல்லத்திருப்பதிவாழெழிற்சடையரடிபோற்றி. ௯

தென்பாற்றிசைநோக்கித்தில்லைச்சிற்றம்பலத்தில்
அன்பாற்றொழுமடியவரைந்தொழிலின்றியுங்காண
இன்பாடல்செய்தங்கிருஞ்சனகாதியர்க்கருளி
முன்பார்வல்லத்தமருமுதிர்சடையரருள்போற்றி. ௧௦

சடையீசர் தேவாரப்பதிகமுற்றிற்று.

---

கடவுள் துணை.

# பலபாடற்றிரட்டு.



## விநாயகர் துதி.

பூத்தமலர்வாவிபொழில்சூழ்தரும்புதுவை
காத்தமலர்வாகைக்கரமைந்தான்—ஏத்துமியற்
செய்யுள்புனையுஞ்சிறப்பென்றுமெற்களிக்கும்
தூய்யமலர்ப்பாதந்துணை. ௧

## வேதபுரீசர் துதி.

முப்புரத்தையன்றுமுனிவாலெரித்துப்புகழ்
செப்புதிரிபுரையைச்சேர்பாகன்—ஒப்பரிய
வேதபுரியீசன்விளங்குகைலைக்கிறைவன்
பாதமலர்போற்றிப்பணி. ௨

## திரிபுரசுந்தரி துதி.

போற்றுமடியவர்செய்பொய்யிருளின்மூன்றுதவி
கூற்றுதைத்தோர்பாகமமர்கோமாதே—ஆற்றலுளா
நன்மொழியாற்செய்யுணவிலவரந்தந்தருளி
மன்னுதிரிபுரையுள்வாழ். ௩

## முருகர் துதி.

விண்ணவர்க்கன்றுற்றவிழுமந்தீர்த்தோங்குகுறப்
பெண்ணவர்க்குமாலைதரும்பெற்றியனே—வண்ணம்
இயைபுதுவைக்கந்தாவிணையினின்சீர்போற்றத்
தலையுடையாய்பாடவரந்தா, ௪

வரதராஜர் துதி.

கஞ்சமல ருந்திதிருக் கண்ணு மணிவண்ணு
எஞ்சு மதிசூடிக் கினியானே—மஞ்சுதவழ்
மாடங்கள் சூழ்புதுவை மன்வரத ராஜனே
நாடொழுவேன் பாடவரந் தா. ௫

இலக்குமி துதி.

கொற்றபங்க யத்திலுறை கோமாதே நின்கருணை
பெற்றவர்கள் பெற்றார் பெருஞ்செல்வம்—மற்றுமெனை
நின்னருட்கா ளாக்கி நிறைந்தநிதி யெற்கருள்வாய்
மன்னறங்கள் செய்வான் மகிழ்ந்து. ௬

சரஸ்வதி துதி.

மதிபோ லொளிரு மலர்வனசத் துன்னில்
பதிநா வெனவுறையும் பாவாய்—நிதியேயென்
உள்ளக் கமலத்தி லோங்கியென் றெருநாவில்
கள்ளமில்சொற் பாவாக் கனிந்து. ௭

வித்தியாகுரு துதி.

கற்கத் தகுவனவே கற்பித் தருள்குருவாய்
நிற்கத் தகுநெறியே நிற்பித்தோன்—தெற்கில்
உறையு மொருமுனிவ னொப்புசுப்ப ராயன்
நிறையருளை நெஞ்சே நினை. ௮

விநாயகர் துதி

## சமஸ்கிருதசுலோகமொழிபெயர்ப்பு.

திருமகளேறுக்க மளிக்குமென்மேலுந் திவ்வியநான் மறைக் கொழுந்தாகி, மருமலிகமலத் தெழிலெலாங்கவர்ந்து [illegible] ராகி யுகளமா வயங்கி, ஒருபெருமொரு நிகரும்ளாம்ப [illegible] யாது

நட்கற்பாலதா மான்செயலொன்றாமிஞ் ஞாலம்
நட்சற்பாலது நடந்ததென் றுணர்ந்தவர் நவியார். கங

வேறு.

வழிவரும் விடமியார்சொல் வண்மைப்புத் தகம்யாதிற்க
தொழில்வயித் தியமேன்மாமி துணைவிழி தருகவன்றி
முழுதுணர் சோதியருகில் முன்னையூர் சென்றகாந்தன்
கழிநெடுந் தூரநீங்கிக் காண்பரென் றுணர்ந்துசென்றாள். கச

வெண்பா.

நல்லோர் நமக்கியற்று நன்மைக்கு யாதுமுனம்
மெல்லோர் நலமிலமென் றெண்ணற்க—அல்லோர்
நமக்கியற்று தீமைக்கு நாம்புரிந்த தேது
நமக்குரிய வன்குணமே தான். கரு

வேறு.

வெறுவிதா யிருந்தவென் னுன்னை மேவிய வருளான்மேன்மை
பெறுங்கவி பாடுவித்துப் பெய்கழற் றொண்டனாக்கி
உறுவினை நீக்கியாண்ட வுத்தம கணேசமூர்த்தி
வறுமைநோய் வாராதெற்கு வழங்குக செல்வமன்றே. கசு

வெண்பா.

அடுத்தவனைக் காக்கு மறமுறைத்தா யெம்மை
விடுத்திடலு மெய்யோ விளம்பாய்—தொடுத்தகவி
பாடியடைந் தேனுக்குப் பாக்கியங்க டந்தருள்வாய்
தேடுகின்றேன் செந்திருத் தேவி. கஎ

வேறு.

ஆக்கவல்லா யாக்கினரை யளிக்கவல்லா யடியரிடர்
போக்கவல்லாய் நின்புகழைப் புகன்றுபோற்றி செய்வேனை

நீக்கவல்லா வெனிலுன்னை நினைந்தார்தொண்டு செய்வார்கள்
மாக்களுநேர்ந்து மடியாரிடர் மாற்றவல்ல பெருமானே. ௧௮

வினையின்பயனே யுயிர்க்குறுமென் வேதவிதியோர் புறந்தள்ளி, தனைவந்தடுத்தோர் வேண்டியவா றாவல்லோயிற் போற்றுமெனை, இனையுமிடரிற் கைவிட்டா லியாவர்நினக்குத் தொண்டாவார், நினைமார்க்கண்டன் றுயர்நீக்க நிறையாயருள்செய் பெருமானே. ௧௯

இடரிலுழைப்போர் தமைக்கண்டா லென்றுநாளும் பதைபதைக்கும், வடிவிலருள்வா ரிதியாவாய் வழிபட்டென்சீர் போற்றுமெனை, கொடியதுயரிற் கைவிட்டால் நினக்கார்தொண்டு செய்வார்கள், கொடியவிடத்தைத் தடுத்தமார் குறையைக்காக்கும் பெருமானே. ௨௦

என்னைப்போல்வார் தமையடைந்தோ ரிடர்தீர்த்தினிய சுகம் பெறுவார், நின்னையடுத்துன் புகழ்பாடி நெடுநாளென்சீர் போற்றுமெனை, அன்றுமிடரிற் கைவிட்டாற் றொண்டுநினக்கார் செய்வார்கள், மன்றுமடியாடனைக்காக மண்ணுஞ்சுமந்த பெருமானே.

அன்பர்மனதைச் சோதிக்க வினைகளைப்பல பெருக்கிவர்தம்
முன்புதோன்றி நிலைகண்டு மூர்த்தியளித்தாய் தொண்டனேன்
வன்புகன்றோ நெடுந்துயரில் வருந்தவிட்டா யடியேனை
இன்பமடியார்க் கிருமையிலு மெளிதாயருளும் பெருமானே. ௨௧

வேறு—விருத்தவிடை[illegible].

கலைமகளை மருமகளாக் காதலித்துக் கொண்டவிந்தச் சனக மங்கை, நிலமகளைத் தன்குலமான் றங்கையெனப் பெற்றதிருச் செழியமங்கை, கலைபுலவிற் கலையுணர்வார்க் கருந்தவர்கள் தா

ராத தன்மையென்னே, நிலையுணராப் புல்லியர்பா லிவர்செல
வுந் தனமுதவு நெறிதானென்னே. ௨௩

அருமைமரு மகளிடத்தும் குறைநினையா மாமியிந்த வகில
த்திலுறுதில்லை,பெருமையிவர்சமமாம் வரிசையினாற் பேதமுறும்
பெற்றியாலே, இருவனையா ரிவரொருமித் தருள்செய்தா லிக
பரங்கள் சித்தியாகும், ஒருமையிவர்க் குண்டாகத் தலைவர்களே
சமநோக்க முதவவேண்டும். ௨௪

மகளின்மரு மகளதிக மெனவுலகம் பாராட்டல் வரிசையா
லும், மிகவரிய பதங்களிலே யிவர்மருவி யருணிறைந்து விளங்
கலாலும், நகமையுற வுலகமெலா மேன்மேலும் பலவளங்க ட்
ழைதலாலும், அகனமர்ந்தெம் முளத்திருந்து தனங்கல்வி யிரண்
டுமிவ ணருள்செய்வாரோ. ௨௫

திருமகளைக் கலைமகளும் பலமறையாற் றுதிசெய்து திகழ்த
லாலும், மருமகளை யரியபதந் திருத்தியுயர் வளமையுற வைத்த
லாலும், இருவருமுன் னன்புடையா ரெனமதித்தே யாமினி
யிங் கினிமையாக, ஒருமையுற வுளத்திருத்தி யிருபொருளும் பெ
றலாகு முறுதியீதே. ௨௬

கலைமகளைப் போற்றினர்க்கிங் கறம்பொருளின் பம்வீடு கா
ட்டுந் திண்பால், அலைமகளை வாழ்த்தினோர்க்கு மிம்மையிலே நாற்
பயனு மளித்துக் காக்கும், மலைமகளை யேத்தினோர்க்குப் பலமகன்
று முத்திபெறு வழியுண்டாகும், நிலைமையிது நான்மறையா கம
ங்களெலா நிச்சயித்து நிகழ்த்துமன்றே. ௨௭

வன்னெஞ்சக் கொடியவர்பால் மலர்மங்கை யிருந்துதனம்
வழங்கக் கண்டோம், நன்னெஞ்ச மில்லவர்பாற் கலைமங்கை யி

ருந்தொரு நாளுங் காணேம், கன்னெஞ்சக் கொடியோர்நல்
லோர்பொருளை வஞ்சனையாற் கவர்ந்துகொள்வார், இன்னெஞ்ச
நல்லோர்தாங் கலைப்பொருளை யினிதாக வெவர்க்குமீவார். ௨௮

உலகுயிர்க்கெல் லாந்தாயா மிவர்தகைமை யானெடுத்திங்
கோதற் பாற்றே, குலமகனல் லாலெவர்கள் குரவர்மறு தியை
யெடுத்துக் கூறவல்லார், பலநலனும் புதல்வருக்கல் லாலெவர்க்
குத் தாய்தந்தை பாலிக்கின்றார், புலனுடைய மகன்குரவர்க் கி
யற்றுவகைமா றிதில்வேறென் புகலத்தானே. ௨௯

ஆதலினற்றிருத்தாயே வஞ்சகமாயகன்றநல்லோ ரகத்திருந்து
மேதகையநனமாகி பதிறுபெறுதவ வேண்டுகின்றேன்
நீயிதுகலைமகள்வாழ் மனைகளெலாமேலாக நெடிதிங்கோங்கும்
பாதகஞ்செய்வஞ்சகரும்பவமகன்றநகன்மையுறப்பாலிப்பாயே.

என்னிருகண் மணியான பொன்மாதுங் கலைமாது மினிது
வாழ்க, மன்னியநற் செல்வர்களுங் கலைஞர்களு மென்மேலு ம
ருவிவாழ்க, பன்னியலஞ் சகமொழிய நல்லோர்களுடோறும்
பலிகிவாழ்க, இன்னியலின் விளைவிடையின் பொருளுணர்ந்து
போற்றுமன்ப ரினிதுவாழ்க. ௩௰

பலபாடத்திரட்டு முற்றிற்று.

உ

சிவமயம்.

—*—

வசிஷ்டமுனிவர் ஸ்ரீராமருக்கு

உபதேசித்தருளிய

# ஞானவாசிட்ட வமலராமாயணம்

மூலமும் - உரையும்,

ஆத்மசுவரூபவிளக்கம்.

—*—

இவை

புதுவை. வெ. பொன்னையாமுதலியாரென்னும்

## சிவானந்தமூர்த்தி

சமஸ்கிருதபாஷையினின்று மொழிபெயர்த்து

தமிழ்க்கவிதையாகப்பாடி

அருளியவை.

சென்னை

வண்ணாரப்பேட்டை

பு. சு. கிருஷ்ணசுவாமிபிள்ளையவர்களது

இலக்ஷ்மீவிலாஸ அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

—*—

கலியுகாதி ௫௲சஉஎஎ—புவ௫

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

மேருமால்வரைத்தென்புறமேவியகருமச்
சீருலாந்தவபூமியிற்றிகழ்நடுநாட்டில்
நீருலாம்வளநிறைதருபுதுவைவெண்முத்துப்
பேருளானுயர்செங்குந்தமன்னருட்பெரியோன். ௧

அருந்தவம்பலசெய்துநீள்தானமுமளித்து
திருந்துநாட்பலசென்றபின்சிவனருளாலே
மருந்ததாமெனப்பொன்னையநாமத்தன்வந்து
வருந்துதாய்தந்தைதவப்பலனிதுவெனமதிக்க. ௨

கலியிறுற்பதொன்பான்சதபதினெட்டிற்கவின்ற
பலிதநாதுமாவருஷமாவணிமதிப்பத்தொன்
பலருதேதிறற்பரணிமூன்றனேதோர்காலில்
நிலனில்வந்தவதரித்தனனவக்கிரகநிலைகேள். ௩

மகரலக்கினமைந்தனங்காட்சிமாமேடம்
புகலுஞ்சந்திரன்றிடபத்திலாருபொற்சிங்கம்
பகலவன்புதன் சுக்கிரன்சேய்கன்னி பண்பாற்
றிகழ்துலாங்குரு விருச்சிகங்கேதுவுந்திகழ. ௪

இந்தநற்சுபவேளையில்ராஜயோகத்தின்
அந்தம்வாய்ந்தரும்புகழ்கொடைவாய்மையுமனுக
சுந்தரந்திகழ்சுக்கிரன்றசையினிற்றோன்றி
தந்தைபாக்கியம்வளர்ந்திடவளர்ந்தனன்சதுரால். ௫

அரிதிற்பெற்றதம்பொருளெனவருமைபாராட்டி
உரியசீரெலாங்குறைவறவுதவித்தண்பிறைபோல்
மருவியைந்திருபருவமும்வளமையாய்வளர்ந்து
வருமைந்தாண்டினிற்கல்விநற்சாலையில்வைக்க ௬

இகபரத்திறனுக்காணபல்கலைகளுமினிதே
அகனமர்ந்துணர்ந்தான்றிருவருள்பெறற்கியானை
முகவிநாயகன்றிருவடிமுன்புறப்பணிந்து
சுகமிகுந்திருப்புகழ்க்கலிவெண்கலிதுதித்தும், ௭

பிரணவப்பொருளாகுமப்பிரானநுபூதி
பூரணமாமவர்திருவலங்காரமும்புகன்று
சரணடைந்தவர்தயையினாற்சண்முகப்பெருமான்
ஆரணருட்பெறமும்மணிக்கோவையுமணிந்து. ௮

பதிகம்பற்பலதலங்களிற்பண்புறப்பகர்ந்து
மதியணிந்தபெம்மான்றிருவருட்கிடனாகி
சதியமைந்துயர்சிவானந்தலகரியுந்துதித்து
பதியிடத்தமர்தேவிநற்பூசையும்பகர்ந்தான். ௯

திருவருட்பிரகாசத்தாந்திகழ்பரம்பொருளை
அரிதுணர்ந்துமெய்க்குருவினையாய்ந்துபல்காலம்
உரியதிவாமுற்றுமுமோட்சத்வமுண்டாய்
பெரிதடைந்தனன்கனகசபையினிற்பெரியோன். ௧௦

சகளரூபமாய்வந்தவர்சாற்றுமெய்ப்பொருளை
நிகளபந்தங்கணீய்க்குறவப்போக்குநெறியால்
அகமலர்ந்துணர்ந்தானந்தமூர்த்தியாதலினால்
சகசிவானந்தமூர்த்தியென்றவர்சொலப்பெற்றான். ௧௧

சுருதியுத்தியோடனுபவத்துணருமப்பொருளை
கருதினாடொறுஞ்சற்சங்கத்தவருடன்கலந்து
மருவுசுத்தவாசனைவழிமனநினைச்செலுத்தி
அருமெஞ்ஞானநூல்பற்பலமொழியினுமாய்ந்து. கஉ

வேதவியாதனார்விளம்பியசூத்திரம்விரித்துப்
போதமாம்படிசங்கராசாரியன்புகன்ற
ஏதமின்றியபாஷியத்திலகுமத்வைதஞ்
சாதமாகத்தாஞ்சாற்றியசாத்திரம்பலவால். கங

ஆங்கவற்றினிலாத்துமபோதமென்றமைந்த
சாங்கமானசாத்திரமொன்றுதக்ஷிணாமூர்த்தி
ஓங்குதோத்திரவஷ்டக முயர்சிவோகமதாம்
பாங்குறுந்துதிமநீஷமாபஞ்சகப்புநுவல். கச

மோட்சசாதனபஞ்சகமுநிர்சுகப்பிரமம்
காட்சியாலுணரவஷ்டகக்கட்டுரைக்கவிதை
மாட்சியானவான்மீகிவாக்குதித்தவாசிட்டம்
சாட்சிசைதன்யசாரஞ்சொல்சுருக்கமோரிரண்டு. கரு

ஆதியாமனுவாய்ந்தெடுத்துரைக்குமத்துவைத
போதமாஞ்சுருதிப்பொருண்மிருதியிற்புகன்ற
வேதவாத்துமப்பிரிவுமுக்குணப்பிரிவாதி
ஓதிவைத்தனனுலகுயத்திருவருட்குறளால். கசு

வித்தியாரணியர்விளம்பியவாக்கியசுதையாம்
சித்தமோகந்தீர்திருக்கொடுதிரிசியவிவேகம்
நித்தியானந்தமுதவுமிச்சாத்திரநெறியை
பத்தியாற்பயின்றருந்தமிழ்க்காவியம்பகர்ந்தான். கஎ

வேறு.

மன்னவர்திலகனல் வளமைமிக்கவன்
இன்னியசொல்லின னெவர்க்குமன்பினன்
மன்னுயிர்க்கிரங்கியே வழாதளிப்பவன்
தன்னிலையுணர்ந்தவர் தாசனாகுவன். கஅ

அறம்பொருளின்பம்வீ டாய்ந்தங்கில்லற
நெறியினிற்றவம்புரி நிலைமைசான்றவன்
அறிவினிற்சிறந்தவர்க் கரியசெம்பொருள்
திறந்திகழ்சாத்திரஞ் சேர்த்தளிப்பவன். கக

மெய்ப்பொருளுணர் மேயசாத்திர
வைப்பெனவைகியவ் வாய்மைஞானநூல்
எய்ப்பிலாதெங்கணு நாடியீட்டலால்
கைப்படுமநுபவக் காட்சிபெற்றுளான். உ0

சாத்திரவிசாரணை தனதுல்லாசமாய்
நேத்திரம்வாக்கொடு நினைவுநின்மல
தோத்திரமோதலுஞ் சூழ்பராணந்த
பாத்திரமாக்சதா பழக்கஞ்செய்பவன். உக

தனமுதற்பொருள்களிற் சார்பற்றின்றியே
மனமுறநல்லறவழியிற்போக்கிய
வனமுறுபகீரதன் கருதுமாசர்வ
இனமுறுதியாகமிங் கெய்தப்பெற்றனன். உஉ

அருட்குசெல்வமே யனகமாக்கொளும்
பொருட்குசெல்வத்தைப் பூரியோர்கொள
மருட்குபோகத்தின் மதிப்பிலாதவன்
இருட்குமாயைபோ யின்பமெய்தினன். உங

நித்தியவனித்திய நிலையுணர்ந்துளம்
சத்தியவற்புத சதோதயானந்த
வித்தகசங்கற்ப மேவியாவையும்
அத்தனதருள்வடி வாகக்காண்பவன். உ௪

அகமெனலின்றியே யாவுமானதோர்
சுகசுவரூபந்தனிற் சுகித்துமேலவர்
நிகமமாவாக்கிய நிலைவழாநெறி
சகலவிகாரங்கள் சார்ந்தும்பற்றிலான். உரு

நல்லனயாவையு நயந்தசிந்தையன்
செல்வமுமின்மையுஞ் சேரக்கண்டுளோம்
தில்லையம்பலத்தினிற் றிகழ்ந்துசாந்தனாய்
அல்லலற்றங்ஙனம் வாழ்வமைந்துளான். உ௬

வேறு.

இல்லறத்தினைம்பானைந்தாண்டியல்புறவிருந்து
நல்லறம்பலவீஸ்வரார்ப்பணமதாய்நயந்து
தில்லைமாவனசிதம்பரக்ஷேத்திரமடைந்து
சொல்லும்வானப்பிரஸ்தாசிரமத்தவநெறிதொடர்ந்தான். உ௭

நாளுமம்பலவாணரையுளத்துறநாடி
ஆளுங்குஞ்சிதபாதமுமரக்கனைமிதித்து
தாளுந்தோள்களுமான்மழுதரித்தசெங்கரமும்
நீளுமாரொளிநிலவுமைந்தொழில்புரி[illegible]. உ௮

கண்டுகொண்டுளிர்சிவானந்தபோதமெய்[illegible]
அண்டரும்பெறற்கரியவாழ்விம்மையி[illegible]
விண்டசெந்தமிழாற்பலபாவலும்விளம்பி
தொண்டருட்சிறந்திருந்தனனுலகெலாந்துதிக்க. உ௯

அரும்பெறற்சனனத்தவரனைவரும்வாழ்க
மருவுசிவனின்முத்தராமிவர்தவம்வாழ்க
ஒருமையாயிவருணர்த்தமெய்க்காவியம்வாழ்க
இருவினங்குசிற்றம்பலச்செல்வர்சீர்வாழ்க. ௯.௭

இஃது

இயற்றமிழாசிரியர்

புதுவை. க. சுப்பராயமுதலியாரியற்றியது.

ஸ்ரீராமஜெயம்.

## நூல்வரலாறு.

ஆதிகாலத்தில் ஸ்ரீவசிஷ்டமுனிவர் ஸ்ரீராமமூர்த்திக்கு உபதேசித்தருளிய ஞானவாசிட்டவமலராமாயணம் ஸ்ரீவான்மீகமஹாருஷியால் ஸ்ரீபரத்துவாஜருஷிக்கு தேவதூதவாக்கியமாக வைராக்கியம், முமூட்சு, உற்பத்தி, திதி, உபசாந்தி, நிருவாணம் என்னும் ஆறுபிரகரணங்களாக முப்பத்திராயிரஞ்சுலோகத்தால் எடுத்துக்கூறிய மூலகிரந்தப்பிரகாரம், நிருவாணப்பிரகரணத்து முற்பாதிமுடிவிலுள்ள மேல் ஆறுபிரகரணசாரமான பரத்துவாஜ அநுசாஸனம், இராமவியுத்தாபனம் என்னும் இரண்டுசருக்கமும் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமுத்துசாமிஐயபாலும், சென்னைப்பனாய்க்கன்பாளையம் ஸ்ரீகந்தப்பையராலும், தஞ்சாவூர் சமஸ்தானத்திலிருந்து எடுத்தெழுதிவந்த மேல் மூலக்கிரந்தம் அதன் வியாக்கியானம்போல கொந்தமூர்-வரதாசாரியரென்னும் வியாகர்ணபண்டிதர் பொருளெடுத்துக்கூற புதுவை. வெ. பொ. சிவானந்தமூர்த்தி மொழிபெயர்த்து தமிழ்க்கவிதையாகப்பாடி மேல் வியாக்கியானத்துக் கொத்தபடி உரையுஞ்செய்து உலோகோபகாரமாக அச்சிற்பதிப்பித்து பயன்படுத்தினர்.

சிவமயம்.

# ஆத்மசுவரூப விளக்கம்.

(பிரபஞ்சோற்பத்தி.)

ஆதியாஞ் சத்தி லகிலசகத் தோற்றம்
பூதபௌ திகப் புணர்ப்பு. ௧

(பூதாத்மசுவரூபம்.)

பஞ்சபூ தத்தின் பகருந்தன் மாத்திரையால்
விஞ்சுசரீ ரம்பூதாத் மா. ௨

(சீவாத்மசுவரூபம்.)

பூதாத்மா தன்னிற் பொருந்தும்பல் சீவாத்மா
தீதசுப சற்கருமத் தால் ௩

(பரமாத்மசுவரூபம்.)

மகதத் துவமெனும்பேர் வாய்ந்தவந்த ராத்மா
அகமாதி விந்திய வாதி ௪

(பரமாத்ம சீவாத்மத்தொழில்.)

பரமாத்ம சீவாத்மா பௌதிகதே கத்தில்
விரவியிச்சை யாய்நடிக்கு மே ௫

(பரமாத்மாவினின்று சீவகாரணந்தோற்றல்.)

பரமாத் துமத்தனுவிற் பஃறீப் பொறிபோல்
வருமிலிங்கத் தேகவகை வந்து ௬

(தேவநராதிதேகம்பெற்றுசுபாசுபகருமஞ்செயல்.)

தேவர் நரர்முதலாஞ் சீவகா ணத்தாலே
ஓவில்கரு மம்மூன்றுற்று வ ௭

சத்துவமே ராஜதமே தாமதமென் முக்குணங்கள்
ஒத்துயிர்க் காத்மா வுதவுமே ௮

(முக்குணத்தாற்சீவபேதமுண்டாதல்.)

எக்குணத்தின்மேலீட்டாலெவ்வெவுயிர்தோற்றுகின்ற
தக்குணத்தாற் றாதம்ய மாம் ௯

(முக்குணலக்ஷணம் சத்துவம்.)

அவ்வப் பொருளி னெதார்த்த மறிதலே
செவ்வியதாஞ் சத்வகுணச் சீர் ௧௦

(இரா[illegible])

இராகத்வே ஷாதி ரஜோ[illegible] செய்கை
தராவிஸ்வா சம்வியசனா [illegible] ௧௧

(தா[illegible])

ஓர்பொருளை மற்றொன்றா [illegible] தாமதத்தின்
சீரில் குணமாகுந் தெளி ௧௨

(முக்கு[illegible])

தெளிவாய்ச் சுகித்தலே [illegible] சுவரூபம்
களிவிடயத் தாழ்விரண்டா[illegible] ௧௩

சத்தசத்தைத்தேரு தா[illegible]ர்முந்திருள்போல்
மத்தமுறல் தாமதமாமே ௧௪

தாமதமே காமந் தனவிச்சை ராஜதமாம்
காமர்தரு மஞ்சாத்வீ கம் ௧௫

(சத்வகுணச்செய்கை.)

வேதம் விரதம் மிகுசாத்திர ஞானம்
தீதிலற மாத்மத் தியானம் ௧௬

(இரஜோகுணச்செய்கை.)

காமியயா கங்காமங் காரியநீள் செய்கையவா
மீமிசைசேர்ந் தஞ்சுதலு மே ௧௭

(தாமதகுணச்செய்கை.)

நாத்திகவா தந்தீச்சொல் நன்மையில்பே ராசைதுயில்
தோற்றிடு கார்ப்பணயஞ் சோம்பல் ௧௮

(தமோகுணத்தின் மூக்கதி.)

தமோகுணத்தின் மூக்கதியாற் றுவாசெந் தாதி
சமானசண்டா ளாதி தோற்றம் ௧௯

(இரஜோகுணத்தின்மூக்கதி.)

இரஜோகுணத்தின் மூக்கதியா னரவப்ஜ ராதி
தராதரமாந் தோற்றந் தரும் ௨௦

(சத்துவகுணத்தின் மூக்கதி.)

சத்துவத்தின் மூக்கதியாற் சாரவர் சுராசுரர்
வித்தகக்கோள் பிரம்மாதி வேறு ௨௧

(கன்மபலன்.)

உத்தமமு மத்திமமு மோததம கன்மத்தின்
முத்திறஞ்சு பாசுபமூ லம் ௨௨

தேவர் மனிதர் திரியக்கு தாவரமாம்
பாவசென்ம முண்டாம் பல உ௩

மனோவாக்கு காயத்தால் வாய்ந்திடுகன் மங்கள்
தனுதுசுக துக்கந் தரும் உ௪

சற்கருமத் தாற்சுப்மூந் தாழ்கருமத் தாற்றுயரும்
பற்றுவதே வாதிநரர் பண்பு உ௫

(திரிகரணச்செயல்.)

மூக்கரணத் தின்மனமே மூலமதாம் பின்வருத்த
ஆக்கருமம் பத்திஞக் காகு உ௬

(மனத்தால்வருங்கன்மம்.)

பிறன்பொருளை வெளவல் பிரமஹத்தி செய்தல்
உறுதேகந் தானென வுன்னல். உ௭

(வாக்கால்வருங் கன்மம்.)

கடுஞ்சொல்பொய் கோட்கூறல் காரியமில் சொற்கள்
படுவாக்காற் செய்பாவங் கள் உ௮

(காயத்தால்வருங்கன்மம்.)

அறனில் கொலைகாம மன்னியதா ரங்தோய்வ
மறஞ்சேர்கா யப்பாவ மாம் உ௯

(சுத்கன்மம்.)

வாக்குமனோ காயத்தால் வந்துறுமிப் பாவகன்மம்
நீக்குவதே சத்கரும மோ ௩௦

(கன்மாறுபவம்.)

வாக்குமனோ காயத்தால் வந்தகன்ம மவ்வவற்றால்
யார்க்குமனு போகமிரு மை ௩௧

தேகத்தாற் செய்பாவந் தாவரசென் மஞ்சேர்க்கும்
ஆகியவாக் காற்றிரியக் காம் ௩௨

மனத்தினாற் செய்பாபம் வன்சண்டா ளாகி
இனத்தவிழி சென்மமெடுக் கும் ௩௩

(திரிகரணசுத்தி.)

வாக்குமனோ காயம் வயப்படுத்தித் தண்டித்தல்
நீக்குதிரி தண்டியெனு மேனோர் ௩௪

திரிகரணந் தம்மைச் ஜெயித்துசுபத் துய்த்தல்
அரியமுத்தி சித்தியுண்டா மால் ௩௫

(இருவினைப்பயன்.)

இருவினையாற் சாரு மிடர்நரக சுவர்க்கம்
தருவதெண்ணிச் சத்கருமஞ் செய் ௩௬

சத்கன்ம மேலீட்டாற் சாற்றுந்தன் மாத்திரையில்
உத்தமபோ கத்தனுவுண் டாம் ௩௭

பாபகன்ம மேலீட்டாற் பஞ்சதன் மாத்திரையில்
மேவுமுடல் யாதனைக்கா மே ௩௮

சத்தசத்தாங் கன்மந் தமையே பரமாத்மா
நித்தியமாய்க் கண்டுண்மிக் கும் ௩௯

(பிரவிர்த்தநிவர்த்தகன்மம்)

பிரவிர்த்த நிவர்த்தமெனப் பேதமுள கன்மம்
நிவர்த்த முத்திக் கான நெறியே ௪௦

பிரவிர்த்த கன்மமேன்மேற் பிறப்படைதற் கீண்டும்
நிவர்த்தமுத்தி சேரு நிலை. ௪௧

(மோக்ஷசாதனம்.)

வேதமுறை யேயோதல் மெய்யுணர்தல் நல்விரதம்
நீதிலறம் யாகஞ்செய் தல் ௬௨

விடயத்தி லிந்திரிய மேவா தடக்கல்
அடைகுருவிற் காம்பணிசெய் தல் ௬௩

முத்திக்குச் சாதனமா மொக்க றிவையாறும்
ஒத்தாத்ம போதமுண் டாம் ௬௪

சகலபூ தத்தாத்மா தன்னிற் சகமும்
சுகவறிவாற் கண்டுசுகித் தல் ௬௫

பூதாதி தேகம் புணர்தத் துவமனைத்தும்
ஆதாரத் தவ்வவைசேர்த் தல் ௬௬

(சீவன்முத்திநிலை.)

செய்சற் கருமமெலாந் தேவார்ப் பணஞ்செய்தல்
உய்ஜீவன் முத்தி நிலை ௬௭

வேதாந்த வுண்மை விசாரித்தி யானெனதென்
றோதாமை யுண்மை நிலை ௬௮

பிரமசா க்ஷாத்காரம் பெற்றோர்க்கு மற்றும்
திரமில்ரா கத்திவேஷ மில் ௬௯

(ஆத்மத்தியானசமாதி.)

தேஜோ மயமாய்த் திகழ்சுவர்ணச் சாயையதாய்
மாஜாக்ர தியான மடைக ௭௦

சுத்த தியானஞ் சுவரூபஸ்தா னய்நின்ற
சித்தமா னந்த சமாதி ௭௧

திருச்சிற்றம்பலம்.

சம்பூரணம்.

உ

சிவமயம்.

வசிஷ்டமுனிவர் ஸ்ரீராமருக்கு

உபதேசித்தருளிய

# ஞானவாசிட்ட வமலராமாயணம்.

## நிருவாணப்பிரகரணம்.

மேவுபாலகாண்டத்தில் விரித்தமோக்ஷோபாயமெனத்
தேவதூத வாக்கியமாத் திகழ்முப்பானீராயிரத்தில்
ஆவதான பிரகரண மாறில்நிருவாணத்துமுதற்
பாவமுடிவிற் பரத்வாஜ வநுசாசனமாய்ப் பகர்வதிது.

---

## பரத்வாஜ அநுசாசனம்.

வியாக்கியானகவி—விநாயகர்துதி.

இந்தச்சருக்கத் திராமமகாமூர்த்தியென்ற விசோ
க்கி, அந்தப்பரத்துவாஜமுனி யறைந்தவியன்மா பொ
ழிதொடர்பா, மநுசாக்ர தியவவத்தை முறைமைதெ
ரிய பகரிலைமை, எந்தையருண்மா முகக்கடவு ளிருதா
ள்போற்றி யுளாசெய்வாம்.

## அவதாரிகை.

ஸ்ரீவசிட்டமுனிவர் ஸ்ரீராமமூர்த்திக்கு வைராக்கியப்பிர கரணமுதல் நிருவாணப்பிரகரணமீறாக — போதனைசெய்து வந்தமுடிவில், (எனக்கிதென்று முனைப்புடைமை யிடாதிட்ட

லாவுணர்வின்மை, அனர்த்தமில்லா வீடளிக்கு மாசையே யிங் கது செய்வாய், சனிப்பில் சிவமெய்களுமுளது சாந்தஞ் சுடஞ் சித்துருவென்னும், கனத்தவிந்தவொருநிலைவேசுருமத்தியாசமி ராகவனே) என்னுஞ்சுவியின்பொருளான நித்தியபூரணசுகபோ தமான சிவஸ்வரூபமேயாவுமாய் விளங்குமென்னுஞ் சுலோக பூதிய சருமத்தியாசமென வாக்கியார்த்த உபதேசத்தையரு ளி, சமாதிசாட்சாத்காரம் அடைவாயென்று அநுக்கிரகஞ்செய் தபடி, ஸ்ரீராமமூர்த்தியடைந்த விசிராந்திசுகத்தை நினைத்தமாத் திரத்தில் ஸ்ரீவான்மீகமகாரிஷிக்கு உண்டான ஆனந்தாவிர்பாவ த்தால் விசிராந்தியடைந்து மௌனமாயிருந்தமைகண்டு பரத் வாஜரிஷி இன்னமுந்தமக்கு அவ்வாறே விசிராந்திவராமை யால் மேலும் சிரவணத்தையே விரும்பி பிரச்னம்பண்ணுகி ன்றார்.

கலித்துறை.

இவ்வாறு வசிட்டமுனி கொடுத்துரைத்த தொன்மை
யதாயிலங்குஞானந், தவ்வாத சாரமெலாங் கேட்டுவந்
தரகுநாதன், றளர்வுநீங்கி, ஒவ்வாத சமபரிபூரணசுகமா
போதநிறைந் துறைந்தானன்றி, அவ்வாறே வினவினே
னே குரவவெனப் பரத்துவாஜ னங்ஙன்கேளா.

இ-ள். இவ்வாறு வசிட்டமுனி - இந்தப்பிரகாரம் வசிட்டமுனிவர், கொடுத்துரைத்த - விரிவாகக்கூறிய, தொன்மையதாயிலங்குஞானம் - பழமையாய்விளங்குகின்ற ஞானத்தின், தவ்வாதசாரமெலாம் - குறைவற்றவிசாரமெலாம், கேட்டுவந்தரகுநாதன் - கேட்டு மகிழ்ச்சியடைந்த இராமமூர்த்தி, தளர்வுநீங்கி - வைராக்கியத்தாற்றோன்றிய தளர்ச்சிநீங்கி, ஒவ்வாத - ஒப்பில்லாத, சமபரிபூரணசுகமாபோதம் - சமபரிபூரணஞானானந்தம், நிறைந்

துறைந்தான் - நிறையப்பெற்றுவிளங்கினோரா, அன்றி - அல்ல து, அவ்வாறே - முன்போலவே, வினவினரோ-வினவுதல் செய்தாரா, குரவவெனப்பரத்துவாஜன் அங்ஙன்கேளா - குருவே சொல்லவேண்டுமென்று பரத்துவாஜரிஷிவினவி, மேலும்.எ-று.

## தாற்பரியம்.

வசிட்டமுனிவர் வெகுவிதமாசப் போதித்துவந்த பிரமாதி சம்பிரதாயமாயுண்டான ஞானசாரத்தைக் கேட்டுணர்ந்த ஸ்ரீ ராமமூர்த்தி மேலும் பிரச்னைசெய்தாரோ, அல்லது சுவாநுபூதி சாட்சாத்காரமடைந்தாரோ அதைக்கூறவேண்டுமென்று பரத்வாஜர் வான்மீகமகாரிஷியை வினவியது. (௧)

(அ-கை.) கேள்வி இருவருக்கும்சரியாசவிருக்கஉனக்குண்டான சந்தேகமோக நீங்கினதும் நீங்காததுங்கொண்டுஇராமருக்கும் அவ்வாறே நிச்சயிக்கலாகாதோவென்று சங்கிக்கப்போகாது ஏனென்றால் இராமருக்கும் எனக்கும் பிகதாரதம்மியமுண்டென்று பரத்துவாஜர் மேலும்கூறுகின்றார்.

அஜையராகவன்பரமயோகிமூவுலகேத்துமமரர்
நாதன், இணையவருபிறப்பிறப்பிலாதசுத்த போதசுபா
வத்தனெல்லாப், புனைகுணங்கட் குறையுளானவன்கம
லையகமகிழும் புனிதவாசன், கனைகடல்சூழ்நிலமெலா
ம் படைத்தளித்து நீக்கவல்ல கடவுளாமேன்.

இ-ள். அஜையராகவன் - அம்மேன்மையுடைய ஸ்ரீராமர், பரமயோகி - இயல்பாக ஞானயோகமுடையவர், மூவுலகேத்துமமரர்நாதன் - திரிலோகங்களுந் துதிக்கின்ற தேவோத்தமர், இணையவருபிறப்பிறப்பிலாத - துன்பத்துக்கேதுவான ஜனன மரணம் இல்லாதவர், சுத்தபோதசுபாவத்தன் - நிர்மலஞானஸ்

வருப்ர், எல்லாப்புனேகுணங்கட்குறையுளானவன் - சகலசத்குணங்களுக்கும் வைப்பானவர், கமலேயகம்கிழும் புனிதவாசன் - ஸ்ரீமகாலட்சுமி வாசஸ்தானமானவர், கனேகடல்சூழுகிலமெலாம் - சத்திக்கின்றகடல்சூழ்ந்த சகலசகத்தையும், படைத்தளித்துநீக்கவல்ல கடவுளாமேறன் - சிருட்டி திதி யநுக்கிரகஞ்செய்யும் வல்லமையுள்ளசர்வேஸ்வரராயு மிருக்கின்றார்—எ-று. (தா-ம்.) ஸ்ரீராமமூர்த்தி நித்தியசித்தமான ஞானயோக ஐஸ்வரியமுள்ளவர், யானோ அறுதியஞ்ஞானமுள்ளவன் அற்பமான சாதனசம்பத்தியுடன் மோக்ஷேச்சையுள்ளவன் எனக்கும் அவருக்கும் வெகுதாரதம்மியமுண்டென்று குறிப்பித்தது. (உ)

(அ-கை.) இவ்வாறு ப்ரத்துவாஜர்வினவ, வான்மீகமகாரிஷி அவாதுகேள்வியிரண்டனுள் முதற்பக்ஷத்தைசாதித்து உத்தரஞ்சொல்லுகின்றார்.

முனம்வகுத்த வேதாந்தப் பொருளெல்லாந் தொகுத்துரைத்த முனிவாசிட்டன், அனகவாக்கியங்கேட்டு மலர்க்கணிரா கவன்ஞான மனைத்துமோர்ந்து, கனசுகவானந்ததத்வோ தயவசத்தா லகமலர்ந்து களங்கநீங்கி, மனநிறைந்தோர் முகுர்த்தவரை சைதன்யா னந்தமகோததியாய்நின்றான்.

இ-ள். முனம்வகுத்த வேதாந்தப்பொருளெல்லாம் - முன்புவகுத்துக்கூறிய வேதாந்தவர்த்தமெல்லாம், தொகுத்துரைத்தமுனிவாசிட்டன் - நிருவாணப்பிரகரணத்தால்கூட்டிப் போதனேசெய்த வசிட்டமுனிவரது, அனகவாக்கியங்கேட்டு- பரிசுத்தமான வாக்கியங்களைக் கேட்டுக்கொண்டு, மலர்க்கணிராகவன் ஞானமனைத்துமோர்ந்து-கமலலோசனரான ராமர் ஞானமுற்றுமுணர்ந்து, கனசுகவானந்த தத்வோதயவசத்தால் - (சத்தி

ப்ர்தவசத்தால்,) அகமலர்ந்து - (உன்மேஷத்தால்பிரகாசித்து) அகமலர்ச்சியுண்டாய், களங்கநீங்கி - நிர்மலசுவரூபியாய், மன நிறைந்து - மனதுபூரணமாய், ஓர் முகூர்த்தவரை - ஒருமுகூர்த்த காலமட்டும், சைதன்யானந்தமகோததியாய் நின்றான்-சுவரூபத்தில்சாக்ரமுடையவராய்பிர்ம்மானந்த சமுத்திரமாய்விளங்கினார் எ-று. (ப-ம்.) சத்திபாதமாவது-அகண்டாகாரவாக்கியசிரவணத்தாலுண்டான சித்தவிருத்தியில் நித்தியநிரதிசயானந் தார்மருத்வோதயமாம், உன்மேஷமாவது-அதன்வசத்தால் அவித்தியா சம்புடத்தைத் திறப்பதாகிய ஞானவிகாசமாம். (தா-ம்.) ஸ்ரீராம மூர்த்தி நிருவிகற்பசமாதியடைந்தமை கூறியது. (ங)

இதுவுமது.

ஆங்கமைந்து கடாவிடையின் மனநீங்கிப் பரானந்த வமுதாற்பூரித், தோங்காரா காரமதாம் பிராணனொடு முரோமபுள கிதமாயங்கம், நீங்காதசிற்சாமா னியசொரூப வியாபகத்தா னிறைந்துநித்யம், தாங்கியவட் டயிஸ்வரியந் திரணமெனு நினைமனந்தான் சமித்ததன்றே.

இ-ள். ஆங்கமைந்து - அவ்வாறுநிலைபெற்று, கடாவிடையின்மனநீங்கி-வினாவிடைகளால் பகுத்தறிதல்முதலான மனோவிவகாரமற்றவராய், பரானந்தவமுதாற்பூரித்து-பரமானந்தவமுதால் நிறையப்பெற்று, ஓங்காராகாரமதாம்பிராணனொடும் - பிரணவாகாரமான உயிர்ப்புடையவராய், உரோமபுளகிதமாயங்கம்-சரீரமெங்கும் மயிர்க்கூச்சுள்ளவராய், நீங்காத - பிரிவின்றிய, சிற்சாமானிய சொரூபவியாபகத்தால் - சன்மாத்திரமான சொரூபவியாபகத்தால், நிறைந்து - பூரணமாய், நித்யம் - எப்போதும், தாங்கியவட்டயிஸ்வரியம் - கிடைத்திருக்கின்ற அணிமாதிஅஷ்டயிஸ்வரியங்களை, திரணமெனநினைமனந்தான்-திரணமா

கநிலேக்கின்றமனம், சமித்ததன்றே-உப்சாந்தமடைந்தது-எ-று. (ப-ம்.) சர்வாதிஷ்டான சன்மாத்திரமாயிருத்தலே பிரத்யகாத்ம சுவரூபமாம், அங்ஙனம் எங்கும் சித்வியாபகமாயிருத்தலே நிரதிசயானந்தாவிர்ப்பாவமாம், இவை அஷ்டயிஸ்வரியங்களிலுந் திரணப்பிராய மனோரதரென்றதனுல் வெளியிடப்பட்டது. (தா-ம்.) வெளிப்படை. (சு)

(அ-கை.) உத்தமாதிகாரியான இராமருக்கு சிரவணாதியால் வந்த பிரமப்பிராப்த்தியை வர்ணித்து மந்தமத்திம அதிகாரிகளுக்கு சித்தசுத்திவரும்பொருட்டு உபாசனுவிசேஷத்தையும், மூன்று அவத்தைகளின் விவேகத்தால் திரிசியங்களை லயஞ்செய்வது முதலான மனோபாயங்களையுஞ்சொல்ல அவைவருதற்கு ஏதுவாகிய பரத்துவாஜருடைய ஆச்சரியமொழி முதலானவைகளை அரிஷ்டநேமியென்னும் இராஜனுக்கு வான்மீகமகாரிஷி எடுத்துக்கூறுகின்றார்.

சிவபதத்தி லேகரச மாக்கலந்து பூரணமாத் திகழ்ந்தியாதொன் றும், அவனுரையா திருந்தனனென் றுன் முனிவன் பரத்துவாஜ னதனைக்கேளா, தவமுனிநா யகவிந்த மகாபதத்தை யிராகவன்றான் சார்ந்தானீது, பவமகலா வெனக்குமிக வாச்சரிய மீதெங்ஙன் பலிப்பதென் ஞ.

இ-ள். சிவப்தத்தில்-பிரமபதத்தில், ஏகரசமாக்கலந்து-ஓரே அம்சமாகக்கலந்து, பூரணமாத்திகழ்ந்து-பரிபூரணமாய்விளங்கிக் கொண்டு, இயாதொன்றும் அவனுரையா திருந்தனனென்றுன் முனிவன்-ஏதொன்றும் இராமர்கூருது மௌனமாயிருந்தாரென்று வான்மீகமுனிவர்கூறினர், பரத்துவாஜனதனைக்கேளா -

பரத்துவாஜர் அதனைக்கேட்டு, நவமுனிநாயக - மகாதபமுடை யமுனிசிரேஷ்டரே, இந்தமகாப்பதத்தை - இந்தமேலானமுத்தி பதத்தை, இராகவன்முன் சார்ந்தான் - இராமர்தா னடைந்தா ர், ஈதுபவமகலாவெனக்கு மிகவாச்சரியம் - பாபியானவெனக் கு இது மிகுந்தஆச்சரியமாயிருக்கின்றது, ஈதெங்ஙன்பலிப்ப தென்று - இப்பேறு எனக்கெவ்வகை கிடைக்குமென்று வின வி, மேலும்—எ-று. (ரு)

இதுவுமது.

மூகராய் மதமேறிச் சிற்றறிவி னெம்போல்வார் முயர்ச்சியெங்கே, மாகமுறு பிரமாதி தேவர்களும் பி ரார்த்திக்கு மகிமைமிக்க, சோகமறு மிராமனுள நிலை யெங்கே குருமூர்த்தி சூழற்பாற்றே, தாகமுறு பவவே லைக் கரையறியா மோகவெள்ளந் தாண்டலெங்கே.

இ-ள். மூகராய் மதமேறி - மூடர்களாய் மதமிகுந்த, சிற் றறிவினெம்போல்வார் - அற்பவறிவினராயிருக்கின்ற என்போ லியர், முயர்ச்சியெங்கே - பிரயத்தினமெவ்வளவு, மாகமுறுபி ரமாதிதேவர்களும் பிரார்த்திக்கு மகிமைமிக்க - வானத்துள்ள பிரமாதிதேவர்களும் பிரார்த்திக்கத்தக்க மேன்மையுள்ள, சோ கமறுமிராமனுளநிலையெங்கே- சோகமற்ற இராமருள்ள நிலையெ த்தன்மைத்து, குருமூர்த்தி - ஓ குருநாயகரே, சூழற்பாற்றே - நா னடையத்தகுமா, தாகமுறுபவவேலைக்கரையறியா-அவாவுகின்ற பிறவிசமுத்திரத்தின் கரைகாணப்படவில்லை, மோகவெள்ளந்தா ண்டலெங்கே - யான்மோகப்பிரவாகத்தைக் கடப்பதெங்ஙனம் கூறல்வேண்டும்—எ-று. (சா)

(அ-கை.) இராமருக்குக் கிடைத்தநிலை எம்போல்வார்க்கு அரிதாதலால் அதுகிடைக்குமாறு கூறவேண்டுமென்று பரத்து

வாஜர்வினவ, வான்மீகரிஷிஅதற்கு சிரவணம் செய்ததையே ம
னனஞ்செய்யவேண்டு மென்கின்றார்.

ஈதெமக்கு நன்குணராக் கடிதுபுகன் றருளென்ன
வியல்வான்மீகி, ஆதிமுத னிருமித்த வசிட்டவாக் கியங்
கடமை யநுசரித்தே, ஏதிலிரா கவன்சரித முழுதுநின்ற
ன் புந்தியினு லினிதாலோசி, தீதிலதே யெம்மாலிங் கு
ன்பொருட்டா லெடுத்துரைக்கச் சிறந்ததென்றான்.

இ-ள். ஈதெமக்குநன்குணர - இதையான் நன்றாயுணரும்
படி, கடிதுபுகன்றருளென்ன - விரைவிற் கூறவேண்டுமென்று
பரத்துவாஜர் வினவ, இயல்வான்மீகி - சிரேஷ்டரானவான்மீ
கர், ஆதிமுதனிருமித்த-ஆரம்பமுதல்எடுத்துக்கூறிய, வசிட்டவா
க்கியங்கடமை யநுசரித்து-வசிட்டமுனிவர் வாக்கியங்களை அநு
சந்தித்து, ஏதிலிராகவன்சரிதமுழுதும்-களங்கமற்ற இராமருடை
யசரித்திரமுற்றும், நின்றன் புந்தியினுலினிதாலோசி - நினதுபு
த்தியால் பரியாலோசனைபண்ணக்கடவாய், தீதிலதேயெம்மாலிங்
கு-குற்றமற்ற அப்பொருளையே எம்மால் இப்போதும், உன்பொ
ருட்டால்-நினக்கு, எடுத்துரைக்கச்சிறந்ததென்றான் - எடுத்துச்
சொல்லத்தக்கதென்றார்—எ-று. இந்த மூன்றுகவியின் (தா-ம்)
இராமர் அடைந்த மேலானநிலையை பரத்துவாஜர்கேட்டு இன்
னும் சிரவணத்தையே விரும்பி வினவ, அதற்கு வான்மீகர் சிர
வணஞ்செய்ததையே சிந்தனையாவிர்த்தி செய்யவேண்டுமென்
று மேலும் உபதேசிக்கத்தொடங்கியது. (எ)

(அ-கை.) பிரபஞ்சம் மித்தையென்று விவேகிகளறிவார்
அவிவேகிகள் அறியாரென்கின்றார்.

அவித்தையின் காரிய மாகு மிச்சகம்
உவப்புறற் கிலேசமு முண்மை யில்லைகாண்

தவப்பெரு விவேகியித் தன்மையோர்ந்திடும்
அவப்புலமூடர்களறைவர்தர்க்கமே.

இ-ள். அவித்தையின்காரியமாகுமிச்சகம் - இந்தப்பிரபஞ்சம் அஞ்ஞானத்தாலுண்டான விஷயமாம், உவப்புறற்கிலேசமுமின்மையில்லைகாண்- சுகித்தற்கு அற்பமும் சத்தியமல்ல வென்றறியக்கடவாய், தவப்பெரு விவேகியித்தன்மையோர்ந்திடும்- தவமுடையபுத்திமான் இந்த எதார்த்தமறிவான், அவப்புலமூடர்கள் - வீணேபுலன்வழியிற்செல்லுமூடர்கள்,அறைவர்தர்க்கமே - வாதஞ்செய்துக்கொண்டிருப்பார்கள்—எ-று. (தா-ம்) பிரபஞ்சம் அசத்தென்றும், சித்தின் அத்துவைதாதிசயமென்றும் விவேகிகளறிந்து சுகிப்பார்கள், அவிவேகிகள் வாதிப்பார்களென்றது. (அ)

(அ-கை.) பொய்யானதுவைதத்தினால் அத்வைதத்திற்கு ஆனியில்லை யென்கின்றார்.

ஒருபொருண் மற்றொரு பொருட்கு வேறிலை
வருமுலகத்தினன் மறைப்பென் வள்ளலே
பிரணவமுதன்மறை பேசும் வாக்கியம்
மருவுமப் பியாசஞ்செய் மனது சுத்தியாம்.

இ-ள். ஒருபொருள் - ஓர்வஸ்து, மற்றொருபொருட்கு - மற்றோர்வஸ்துவுக்கு, வேறிலை-வேறுபட்டதல்ல, வருமுலகத்தினன் - இங்ஙனந்தோற்றமான பிரபஞ்சத்தினால், மறைப்பென் வள்ளலே - வண்மையுள்ளபரத்துவாஜனே என்மறைக்கப்படுகின்றாய், பிரணவமுதன்மறை பேசும்வாக்கியம் - பிரணவமுதலான மகாவாக்கியமந்திரங்களை, மருவுமப்பியாசஞ்செய் - பொருந்தியபழக்கஞ்செய்வாயாக, மனதுசுத்தியாம் - மனோபரிசுத்தமு

ண்டாகும்——எ-று. (தா-ம்.) எப்பொருளும் சச்சிதானந்தாம்ச மாயிருத்தலின் வேற்றுமையில்லையென்றுகருத்து. (௯)

(அ-கை.) அவற்றுள் முதலில் பிரணவத்தின் முதன்மாத்திரையின்பொருளான ஜாக்ரப்பிரபஞ்சத்தை தெரிந்து அதின்சாட்சிவிவேகம் வரும்பொருட்டு பொய்யென்று நிரூபிக்கின்றார்.

எவனுளந் தன்னிலே யிலகுஞ்சித்தொளி
அவனவ னியினுள விஷய மாகிய
பவமுறு சாக்கிரம் பயின்ற நித்ரையின்
நவமுறு கனவுபோ னயந்து காணுமே.

இ-ள். எவனுளந்தன்னிலே - இயாவன்மனதில், இலகுஞ்சித்தொளி- ஞானதீபம் பிரகாசிக்கின்றதோ, அவனவனியினுளவிஷயமாகிய - அவனுக்குப் பிரபஞ்சவிஷயமான, பவமுறுசாக்கிரம்-தோற்றுகின்ற சாக்ரவிர்த்தியானது, பயின்றநித்ரையின்- உண்டானநித்திரையினிடத்து, நவமுறுகனவுபோல்-புதுமையானசொப்பனம்போல், நயந்துகாணுமே-நன்றாய்விளங்கும்-எ-று. (தா-ம்.) சீவன்முத்தனான ஞானிக்கு மூன்றவத்தைகளும் மூன்றுசொப்பனமாக தோற்றுமென்று சுருதியிற்கூறப்பட்ட கருத்தை உணர்த்தியது. அவத்தாதிரய சாட்சிமாத்திரமாய் சுகிப்பானென்றுகருத்து. (௧௰)

இதுவுமது.

ஆயவிப் பிரபஞ்ச மவித்தை மூலமாம்
மேயது முடிவினும் விலகுஞ் சூன்யமாய்
பாயவிம் மத்தியிற் பயனின் றுதலால்
தூயநல் விவேகிகள் துச்ச மென்பரே.

இ-ள். ஆயவிப்பிரப்ஞ்சம் = தோற்றமானவிந்தச்சகம், அவித்தைமூலமாம் - அஞ்ஞானத்தைக்காரணமாகவுடையது, மேயதுமுடிவினும் விலகுஞ்சூன்யமாய் - பொருந்திய இந்தச்சகம் விசாரணைமுடிவிலும் இல்லாமற் போகின்றது, பாயவிம்மத்தியில் - இதனடுவிலும், பயனின்றுதலால் - சத்தையில்லாமையால், தூயநல்விவேகிகள் - மெய்யுணர்வுடைய விவேகிகள், துச்சமென்பரே - அசத்தியமென்று சொல்வார்கள்—எ-று. (தா-ம்.) நடுவிலுமென்றது - திரிவித்கரணத்தால் பகுத்தறிந்து பரியாலோசனை செய்யும்போது நிலையில்லாமல் பிராதிபாசிகமாத்திரமாயிருத்தலால் அதில் விவேகிகள் சத்தியபுத்தியையார்களென்றுகருத்து. (ட-ம்) திரிவித்காணமாவது-வியாவகாரிகன், பிராதிபாசிகன், பாரமார்த்திகன் பேதமறிதல். (கக)

(அ-கை.) அசத்தானபிரபஞ்சம் வாசனையோடுகூடிய அவித்தையால் கந்தருவநகரம்போல தோற்றமாத்திரமென்கின்றார்.

அசத்தெனப் படுமிது வநாதி வாசனை
வசத்துறு தோஷத்தால் மருவுங் கந்தர்வ
விசித்திர நகரென மிகவும் பிரமையால்
இசைத்தசம் சாரந்தா னிங்ஙன் காணுமே

இ-ள். அசத்தெனப்படுமிது - பொய்யென்று சொல்லப்படும் இந்தப்பிரபஞ்சம், அநாதிவாசனைவசத்துறுதோஷத்தால் - அநாதி அவித்தியாவாசனை வசத்துண்டான தோஷத்தினால், மருவுங் கந்தர்வவிசித்திரநகரென - கந்தருவநகரம்போல் நானாநாமரூப பேதமாகத்தோன்றி, மிகவும்பிரமையால் - மிகுந்தமோகத்தால், இசைத்தசம்சாரந்தானிங்ஙன் காணுமே - சொல்லப்பட்ட விகாரங்கள் உண்டாம்—எ-று. (கட)

(அ-கை.) சுத்தாசுத்தவாசனையை உவமானபூர்வமாகக் கூறுகின்றார்.

அமலநற்சுபந்தரு மழிவில் சைதன்ய
விமலமா வமிர்தயைங் கொடியை மேவுறு
தமமிகு வாசனை தங்கு நஞ்சதாய்
அமர்கொடி யென்கொல்நீ யணுகன் மோகத்தால்

இ-ள். அமலநற்சுபந்தரும் - பரிசுத்தமான மங்களந்தருகின்ற, அழிவில்சைதன்னிய - அழிவற்றஞானமாகிற, விமலமாவமிர்தயைங் கொடியை - சுத்தமான அமிர்தசஞ்சீவிக்கொடியை, மேவுறுது - அடையாமல், தமமிகுவாசனை - அஞ்ஞானமாகியபிரபஞ்சவாசனை, தங்குநஞ்சதாயமர்கொடி - தங்கும்படியான விஷக்கொடியை, என்கொல்நீயணுகன்மோகத்தால் - அறியாமையால்என்அடைகின்றாய்—எ-று. (கரு)

இதுவுமது.

இத்தகு சாக்கிரந்தா னியல்நிரா லம்பப்பற்றை
பற்றுமுன் வீழ்ந்ததாங்குப் பற்றிய பின்புதோன்று
உத்தம துரியவிந்த நிராலம்ப வுலப்பின்ஞானம்
சத்துவ யோகமுள்ளோர் தமக்கநு பவமதாமே.

இ-ள். இத்தகுசாக்கிரந்தான் - இந்தசாக்ராவஸ்தையானது, இயல் நிராலம்பப்பற்றை - மேலானநிராலம்பஞானப்பற்றுக்கோட்டை, பற்றுமுன்வீழ்ந்தது - பிடிக்குமுன் வீழ்ந்துவிட்டது, பற்றியபின்புதோன்று - அதைப்பற்றிக்கொண்டால் பின்பு இந்தசாக்ராதி அவஸ்தாதாபங்கள் வரமாட்டாது, உத்தமதுரியவிந்த நிராலம்பவுலப்பில் ஞானம் - மேலான இந்தநாலாவது துரிய நிராலம்பஞானம், சத்துவயோகமுள்ளோர் தமக்கநுப

வமதாமே-ஞானயோகிகளுக்கு அநுபவமாம்—எ-று. இ-ங-க- (தா-ம்.) சித்தநிலைக்கேதுவான நிராலம்பஞானம் பற்றை பற்றுவதன்முன் - இந்தசாக்ரமுதலான மூன்றவத்தைகளுண்டேயன்றி துரியதிசையில் தத்துவதரிசனத்தினல் அவையில்லையென்றும் இதுஞானயோகிக் கநுபவமாமென்றுங்கூறியது. (கச)

இதுவுமது.

எம்மட்டு மமுதபூர்ண விரதமா ஞானவாரி
தம்முயர் சுவரூபத்தியானந் தன்னிலெய்தக்கிட்டா
தம்மட்டும் பிரபஞ்சபாவ வலைதிகழ் விக்ஷேபந்தான்
செம்மையன்நதியிற்றோன்றுஞ்செறியுமஞ்ஞானத்தாலே

இ-ள். எம்மட்டும் - எதுபரியந்தம், அமுதபூர்ண விரதமா ஞானவாரி-அமிர்தப்பிராயமான ரசநிறைந்த ஞானநதியானது, தம்முயர் சுவரூபத்தியானந்தன்னின்ல் - தமதுமேலான சுவரூபபாவனையினல், எய்தக்கிட்டா தம்மட்டும் - அடையக்கிடையாதோ அதுவரையில், பிரபஞ்சபாவவலைதிகழ் விக்ஷேபந்தான்-பிரபஞ்சபாவனையாகிற விக்ஷேப அலைகள், செம்மையன்நதியிற்றோன்றுஞ்செறியு மஞ்ஞானத்தாலே - அஞ்ஞானத்தால் அவ்வெள்ளத்தில் தோன்றும்—எ-று. (தா-ம்.) அஞ்ஞானமிருக்கும்வரையிற்றன் ஞானநதியில் ஜகத்தாகிற விக்ஷேப அலைகள் தோன்றுமென்றது. (கரு)

இதுவுமது.

முன்னமு மில்லையிந்தத் திரிசிய வஸ்துமுற்றும்
பின்னையு முடிவிலில்லை பிரித்திடி னதலாலே
அன்னவை மத்தியத்து மபாவமென்றறிந்துகொள்வாய்
பன்னுறு கனவுபோலப் பார்த்திட வேண்டுமெண்ப.

இ-ள். முன்னமுமில்லையிந்தத்திரிசியவஸ்துமுற்றும் - இந்தத்திரிசியமான சகலவஸ்துவும் ஆதியிலுமில்லை, பின்னையுமுடிவிலில்லை பிரித்திடின்-படித்துணரும்போதுபின் அந்தத்திலுமில்லை, ஆதலாலே - ஆனதால், அன்னவைமத்தியத்தும் - அவைமத்தியகாலத்திலும், அபாவமென்றறிந்துகொள்வாய் - இல்லையென்றே அறிந்துகொள்ளக்கடவாய், பன்னுறுகனவுபோல-சொல்லப்பட்ட கனவைப்போல, பார்த்திடவேண்டுநண்ப - (சிநேகனே)? சாட்சிமாத்திரமாய்க் கண்டிருப்பாயாக—எ-று. (தா-ம்.) முன்னும்பின்னுமில்லாத வஸ்து நடுவிலும் இல்லையென்பதே யுக்தமாதலால் ஜகத்திரியம் கனவுபோலத் தோற்றமாத்திரமேயென்றது. (௬௯)

இதுவுமது.

அவித்தைதான் மூலமாக வணுகுமிவ் வஸ்துபேதம்
நிவத்தநீர்க் குமிழிபோல நிலைபெறுக் கணந்தானிற்கும்
உவப்புற நிறைந்தஞான வுததியி னிகழ்ந்ததன்கண்
அவப்பிரிவின்றியொன்று யணுகுமெய்புணர்வாற்காணை

இ-ள். அவித்தைதான்மூலமாக - அஞ்ஞானங்காரணமாக, அணுகுமிவ்வஸ்துபேதம் - நாமரூபபேதமாகத்தோற்றும் வஸ்துக்கள், நிவத்தநீர்க்குமிழிபோல - எழுகின்ற நீர்க்குமிழிபோல, நிலைபெறுக்கணந்தானிற்கும் - நிலையின்றிக்ஷணந்தானிருக்கும், உவப்புறநிறைந்த ஞானவுததியினிகழ்ந்து - ஏகாகாரமாய் நிறைவுபெற்ற ஞானசமுத்திரத்திற்றோன்றி, அதன்கண் - அதனிடத்து, அவப்பிரிவின்றி - வேறுபட்டிராமல், ஒன்றுயணுகு மெய்புணர்வாற்காண - விவேகத்தாலுணரும்போது ஏகவஸ்துவாக விளங்கும்—எ-று. (தா-ம்.) வெளிப்படை. (௭0)

(அ-கை.) ஞானத்தின்மேன்மையும் அஞ்ஞானத்தின் இழிவுங் கூறுகின்றார்.

சித்தமார்பிராந்திக் கிரீஷ்மதாபங்க டீர்ந்தகன்றொழிந்திடுமாறு, சுத்தசீ தளநீர் ஞானநன் நதியைத் தோய்ந்துப சாந்தியைப்பெறுக, மத்தவஞ் ஞானச் சலதியொன் றதன்கண் வையமாழ்ந் திடப்புரிந்திருக்கும், தத்தகங்காரப் பேரலையுளது சாருமஞ் ஞானவாதத்தால்.

இ-ள். சித்தமார்பிராந்திக்கிரீஷ்மதாபங்கள் - மனதிற்பொருந்திய மோகமென்னுங் கொடையிற்றோன்றும் வெப்பமானது, தீர்ந்தகன்றொழிந்திடுமாறு - தூரநீங்கிப்போகும்படி, சுத்தசீதளநீர் ஞானநன்நதியைந்தோய்ந்து - குளிர்ந்தபரிசுத்தமான ஞானநதியின்மூழ்கி, உபசாந்தியைப்பெறுக - உபசாந்தமடையாந்தக்கது, மத்தவஞ்ஞானச் சலதியொன்று - மூடமான அஞ்ஞானசமுத்திரமொன்றுண்டு, அதன்கண் - அதுதனக்குள், வையமாழ்ந்திடப்புரிந்திருக்கும் - உலகத்தைநமூழ்கவைத்துக் கொண்டிருக்கும், தத்தகங்காரப் பேரலையுளது - எழுகின்ற அகங்காரமென்னும் பேரலைகளையுடையது, சாருமஞ்ஞானவாதத்தால்-அவை அஞ்ஞானக்காற்றினாலுண்டாகின்றனவாம்—எ-று. (தா-ம்) அஞ்ஞானவாதம் குதர்க்கமென்னும் பொருள்கொள்க. (கஅ)

இதுவுமது.

அந்தவஞ் ஞானக் கடலினிற் சிறிய வலைகள்யாதெனிலெனிலில்லா, விந்தையாம் விஷயங் களிற்சித்தமேவு விரித்திபே தங்களுமவற்றின், மூந்துகா ரணமா மிராகமாதியவு மோகமா மவத்தையே சுழியாம், வந்துறு முதலை விருப்பொடு வெறுப்பாம் வயப்படி ணரகமார் தடிப்பார்.

இ-ள். அந்தவஞ்ஞானக்கடலினில் - அந்த வக்கியானசமுத்திரத்தில், சிறியவலைகள்யாதெனில் - சிற்றலைகள்யாதென்றால், அலகில்லாவிந்தையாம் விஷயங்களில் - அளவற்றவிநோதமான விஷயங்களில், சித்தமேவுவிரித்திபேதங்களும் - மனஞ்செல்கின்ற சங்கற்பவிகற்பங்களும், அவற்றின் மூந்துகாரணமாமிராகமாதியவும் - அவைக்கு முதற்காரணமான ராகத்வேஷாதிகளுமாம், மோகமாமவத்தையே சுழியாம்-மயக்கமானமமதையேசுழியாகும், வந்துறுமுதலை - அதிலுண்டாகின்ற முதலைகளோ, விருப்பொடு வெறுப்பாம்- விருப்பமும் வெறுப்புமாம், வயப்படினரகமார்தடுப்பார் - அதிலகப்பட்டுக்கொண்டால் பாதாளத்தையார் தடுப்பவர்கள்—எ-று. (ப-ம்.) பாதாளமென்றது-இயமலோகம். (தா-ம்.)வெளிப்படை. (கக)

(அ-கை.) அஞ்ஞானக் கடலைவிட்டு ஞானசந்தக்கடலிற் குளித்து மாயாசோகந்திரப் போதிக்கின்றார்.

சாந்தமா மமுத வலைதிகழ் கின்ற சைதன்ய வாரியி
ன்மூழ்காய், நீந்துதற் கரிய பேதவஞ் ஞான நிகழுவர்க்
கடலலை புகுதேல், போந்துள தேது சேர்ந்துள தேது
பொருந்துவ தேதெவர்க் கெவனுல், ஆந்திகழ் விவேகி
யானநீ யென்கொ லலைதரு மாயையி னமிழ்தல்.

இ-ள். சாந்தமாமமுதவலை திகழ்கின்ற - சாந்தமாகிய அமுதவலைகளையுடைய,சைதன்யவாரியின்மூழ்காய்-ஞானநதியில் ஸ்நானஞ்செய்யக்கடவாய், நீந்துதற்கரிய-நீந்திக்கரையேறக்கூடாத, பேதவஞ்ஞானநிகழ் - பேதகற்பனையைத்தரும் அஞ்ஞானமான, உவர்க்கடலலைபுகுதேல்-உப்புச்சமுத்திர கல்லோலத்திற்செல்லாதே, போந்துளதேது - போனதென்ன, சேர்ந்துளதேது - இருக்கின்றதென்ன, பொருந்துவதே தெவர்க்கெவனுல் -

எவனுக்குளவனால் எதுண்டானது; ஆந்திகழ்விவேகியானநீ - நி றைந்தவிவேகஞ்ளோநீ, என்கொலதைருமாயையி னமிழ்தல்- அலைக்கின்றமாயையிலமிழ்ந்தி எனழிகின்றாய்—எ-று. கொல் அசை (தா-ம்.) வெளிப்படை. (உ0)

இதுவுமது.

இந்தமா ஞால மேகமா மாத்ம தத்துவ மென்றுவே தாந்த, அந்தவாக் கியங்க டெளிதர வியம்ப வஃதன்றிச் சோகநீ யெய்தற், கெந்தகாரியமிங் கிருப்பது சகமா யி சைந்தவிப் பிரமமா விவர்த்தம், மந்தமாஞ் சிறியர்க் கு ளது நல்லறிஞர் வயங்கும விவர்த்தமாய் மகிழ்வார்.

இ-ள். இந்தமாஞாலம் - இந்தப்பெரிதானவுலகம், ஏகமா மாத்மதத்துவமென்று - ஒன்றானபிரம்ம சுவரூபமென்று, வே தாந்த அந்தவாக்கியங்கள் - வேதமுடிவான மகாவாக்கியங்கள், தெளிதரவியம்ப - தெளிவாகச்சொல்லவும், அஃதன்றிச்சோகநீ யெய்தற்கு - நீஅதைவிட்டு சோகமடைகிறதற்கு, எந்தகாரியமி ங்கிருப்பது - யாதுவிஷயம்இங்கிருக்கின்றது, சகமாயிசைந்த - சகம்போலத்தோன்றுகின்ற, இப்பிரமமாவிவர்த்தம் - இந்தப்பி ரம்மவிவர்த்தமானது, மந்தமாஞ்சிறியர்க்குளது - மந்தமானசிற் றறிவினர்க்குள்ளது, நல்லறிஞர் - நல்லவிவேகிகள், வயங்குமவி வர்த்தமாய்மகிழ்வார்-வேறுபாடின்றி பிரம்மானந்தமாயநுபவிக் கின்றார்கள்—எ-று. விவர்த்தம் பழுதைபாம்பெனல். (உக)

இதுவுமது.

பவமிகு மாந்தர் காரண மின்றிப் பல்சுக துக்கமே யடைவார், தவமிகு தத்வ ஞானியோ நகைத்துத் தான் மகிழ்ந் திருக்குமோர் காலை, அவருறு மோகப் படுமெ

னிலவலா யநுசரி மாத்திர மன்றி, உவனந்த மோகந் தனைக்கணத் தொழிக்கு முற்றுணர் மெய்யறிவாலே.

இ-ள். பவமிகுமாந்தர் - பாபகன்மமேலிட்டசனங்கள், காரணமின்றி - காரணமில்லாமல், பல்சுகதுக்கமேயடைவார்-பலவானசுகதுக்கங்களை யடைகிறார்கள், தவமிகுதத்வஞானியோ-நிட்காமதபமுள்ள ஆத்மக்ஞானியோவென்றால், நகைத்துத்தான் மகிழ்ந்திருக்கும் - சிரித்துக்கொண்டு சந்தோஷமாயிருப்பான், ஓர்காலை அவமுறுமோகப்படுமெனில் - ஆனால் ஒருசமயம் மோகமடைகின்றானேயென்றால், அவலாயநுசரிமாத்திரமன்றி-அவிவேகிகளையநுசரித்த மாத்திரமல்லது, உவனந்தமோகந்தனை - இவனந்தமோகத்தை, கணத்தொழிக்கு முற்றுணர்மெய்யறிவாலே - மெய்யுணர்வால் நன்குணர்ந்து க்ஷணத்தில் நீக்கிக்கொள்வான்—எ-று. இ-உ-க-(தா-ம்.) விவேகிகள் சகம்பிரம்மாகாரமெனக்கண்டநுபவிக்கிறார்களென்றும், அவிவேகிகள் வேறாய்க்கண்டு சுகதுக்கத்திலழுந்துகிறார்களென்று முணர்த்தியது.

(அ-கை.) அவிவேகிகளுக்கு அவித்தையின் மறைப்பால் சட்டங்கள் சித்தாகத்தோற்று மென்கின்றார்.

அனையவிச் சூக்ம வாத்மதத் துவமு மவித்தையின் றிரோபவ மதனால், இனையவஞ் ஞான வுலகவாச்சலத்து மெதிருறு தலத்தினு மாறாய், நினையுநீர் நிலமா நிலஞ்சல மாகவெடிதுசம் சயமுறல் போல, புனையுமவ் வான்மா பேதமுள் ளதுபோற் புகன்றிடப் பிராந்தியாற் றோன்றும்.

இ-ள். அனையவிச்சூக்மவாத்ம தத்துவமும் - அங்ஙனஞ்சூக்குமமான ஆத்மசுவரூபமும், அவித்தையின்றிரோபவமதனால்-

அஞ்ஞான மறைப்பினுல், இனையவஞ்ஞான வுலகவர் - இத்தன்மையரான அக்கியானசனங்கள், சலத்துமெதிருறுதலத்தினுமாருய் - எதிரேதோன்றுகின்ற சலத்தினிடத்தும் பூமியினிடத்துமாற்றமாக, நினையுநீர் நிலமாநிலஞ்சலமாக - நிச்சயிக்கத்தக்க சலத்தைநிலமாகவும் - நிலத்தைச்சலமாகவும், நெடிதுசம்சயமுறல்போல - மிகவுஞ்சந்தேகப்படுவதுபோல, புனையுமவ்வான்மா - விளங்கக்கூறியவந்த ஆத்மா, பேதமுள்ளதுபோல்-பேதத்தோற்றமுள்ளதுபோல், புகன்றிடப் பிராந்தியாற்றேன்றும்-மயக்கத்தால்கூறும்படி தோன்றும்—எ-று. (தா-ம்.) உலகத்தார்க்கு பிரமையால் ஒன்று வேறொன்ருகத் தோற்றல்போல அவித்தையால் ஆத்மாநாமரூபசகமாகத்தோற்றுமென்றுகருத்து(உங)

(அ-கை,) தேகாதிபிரபஞ்சதோற்ற நாசத்நால் ஆத்மாவுக்கழிவில்லை யென்கின்ருர்.

பிருதிவி முதலாம் பூதங்க ளைந்தின் பிறங்கணு மயமெனுஞ்சகந்தான், மருவுமப்போதுஞ் சோகமே வுதற்கு மாய்ந்துபோம் பொருளொன்று மில்லை, வருந்தவர் மதத்துந் தேகாதி யனைத்தும் வயங்காத்ம சொரூபமன்றதனல், இருந்துள வான்மா தேகநா சத்தா லெய்திடா தழிவென வுணர்வாய்.

இ-ள். பிரதிவிமுதலாம் பூதங்களைந்தின் - நிலமுதலான பஞ்சபூதங்களினது, பிறங்கணுமயமெனுஞ்சகந்தான் - தோற்றுகின்ற பரமாணுமயமென்று கொள்ளப்பட்ட சகமானது, மருவுமப்போதும் - அங்ஙனமாம் போதும், சோகமேவுதற்கு - சோகப்படுதற்கு, மாய்ந்துபோம் பொருளொன்றுமில்லை - அழிந்துபோகின்ற பொருளொன்றும் இல்லையே, வருந்தவர்மதத்தும்

துன்புறுகின்ற அவர்மதசம்மதமும், தேகாதியனைத்தும்-தேகமு தலிய பிரபஞ்சமெல்லாம், வயங்காத்மசொரூபமன்றதனுல் - வி ளங்குகின்ற ஆத்மசுவரூபமல்லாமையால், இருந்துளவான்மா-நித்தியமான ஆத்மாவானது, தேகநாசத்தால் - தேகாதிபிரபஞ்ச மழிதலினுல், எய்திடாதழிவெனவுணர்வாய் - அனித்தியமாய மழியாதென்று அறியக்கடவாய்—எ-று.(தா-ம்.)சகத்து பரமாணு மயமென்னும் வாதிபோலநினைத்தாலும் தேகாதிநாசத்தில் சோ கத்திற்கிடமில்லை மாயாம்சமென்னும் பட்சத்தில் சோகபிரசி த்திக் கிடமில்லையென்றும் கருந்து. (உச)

(அ-கை.) பிரியவஸ்து அழிந்தாலல்லோ சோகமுண்டாம் உள்ளது அழிகிறதில்லை; அசத்தாய் இல்லாதது எப்போதுமில் லை ஆகவே இரண்டுபக்ஷத்திலும் சோகத்திற் கேதுவில்லையென் கின்றார்.

மிக்கசத் தாம்பொருட்கு மேவுசம் பவமேயில்லை
தக்கதா யுளபொருட்கு சாற்றிடு மபாவமில்லை
இக்குறி நோக்குங்காலை யியைதரு மாயையாலே
அக்குண வஸ்துதோன் றி யழியும்வேறன் றியில்லை.

(இ-ள்.) மிக்கசத்தாம் பொருட்கு - மிகவும் அசத்தானவ ஸ்துவுக்கு, மேவுசம்பவமேயில்லை - உண்டாந்தன்மையில்லை, த க்கதாயுளபொருட்கு - தகுதியாய்உள்ளவஸ்துவுக்கு, சாற்றிடு மபாவமில்லை - சொல்லப்படும் இல்லாமையில்லை, இக்குறி நோக்குங்காலை - இந்தக்குறியை யூகிக்கும்போது, இயைதருமா யையாலே - பொருந்தியமாயையினுல், அக்குணவஸ்து தோன் றி - அத்தன்மையதான திரிசியந்தோன்றி, யழியும்வேறன்றி யில்லை - மறைந்துபோகு மல்லது வேறில்லை—எ-று. (உரு)

(அ-கை.) சரீரமுதலானதிரிசியமெல்லாம் மாயையால் வந்ததென்றால் சோகத்திற்கேதுவேதென்னுஞ் சங்கைக்கு உத்தரம் கூறுகின்றார்.

தேகமுற் பொருள்களெல்லாந் திகழுமா யையினு லென்னில், ஆகிய விந்திரசாலத் துதாசீனம் போலாம ன்றி, சோகமோ கங்களேதென் றிடிற்றொடர் புண்யபா பம், பாகமாம்புருடகன் மம் பயனுற விடம்போற்பற்றும்

இ-ள். தேகமுற்பொருள்களெல்லாம் - தேகாதிபிரபஞ்சமெல்லாம், திகழுமாயையினாலென்னில் - மாயையினாலேதோற்றுமென்றால், ஆகியவிந்திரசாலத்து - உண்டான இந்திரசால மாயாதோற்றத்தில், உதாசீனம்போலாமன்றி - விருப்புவெறுப்பற்றிருக்கவேண்டுமல்லது, சோகமோகங்க ளேதென்றிடில் - சோகமோகம்ஏன்உண்டாகிறதென்னில், தொடர்புண்யபாபம்- முன்செய்த புண்ணியபாபங்களின், பாகமாம்புருடகன்மம்-பரிபாகமான புருஷமுயர்ச்சியானது, பயனுறவிடம்போற்பற்றும்- அநுபவிக்கவிடம்போலப்பற்றிக்கொண்டிருக்கும்.ஆதலால்-எ-று. (தா-ம்.) மாயையாற்றோன்றும் தேகாதிகளாற்செய்த புண்ணியபாபங்களை யநுபவிக்கும்பொருட்டு விஷத்தைப்போல மோக சோகமரணாதி அனர்த்தங்களைக்கொடுக்க கர்ம மேதுவாயிருக்குமென்றுகருத்து. (உகூ)

(அ-கை.) அந்தக்கர்மவசத்தால் வேதாந்தசாஸ்திரம் அநந்தரம் உபதேசித்தாலும் மனதிற்பொருந்துகிறதில்லை அதுநீங்கும் பொருட்டு ஈஸ்வரவுபாசனைவேண்டுமென்கின்றார்.

அன்பொடு சார்ந்தோர்தம்மை யநுக்கிரகஞ்செய்யுமாறு நன்குறவிளங்குமர்த்த நாரீசமூர்த்தமாதி

இன்புறத் தரித்துலோக குருவென விருக்குமீசன்
தன்னருள் போற்றல்செய்வாய் தனிமன நிலைபெறற்கே

இ-ள். அன்பொடுசார்ந்ததோர்தம்மை - அன்பாகத்தன்னை வழிபட்டவர்களை, அநுக்கிரகஞ்செய்யுமாறு - இரட்சிக்கும்பொருட்டு, நன்குறவிளங்கும் - நன்றாகப்பிரகாசிக்கும், அர்த்தநாரீசமூர்த்தமாதி - அர்த்தநாரீஸ்வரமூர்த்தமுதலியன, இன்புறத்தரித்து - பிரியமாகக்கொண்டு, உலோககுருவெனவிருக்கும் ஈசன் - சகத்குருவாக இருக்கின்ற பரமேஸ்வரர், தன்னருள்போற்றல் செய்வாய் - தனது அருள்வடி வைத்துதிசெய்யக்கடவாய், தனிமனநிலைபெறற்கே - மனம்பரிசுத்தநிலைபெறும்பொருட்டு—எ-று. (தா-ம்.) ஞானங்கிடைத்தற்கு ஈஸ்வரவுபாசனைவேண்டுமென்று கருத்து. (௨எ)

இதுவுமது.

நினக்குள பாப வினையெலா மின்ன நீங்கிலைநிச்சயமாக, இனத்துள பசுக்கள் கருமமே யந்த வீசனும் பசுபதி தனக்குக், கனத்தபா சமதா மவர்களைப் பிறப்பிற் கலப்புறக் கட்டுதற் கென்று, உனற்கரு மறைகள் பிரசித்தமா யுரைக்கு மூன்னுக நன்கிதை யென்ன.

இ-ள். நினக்குளபாபவினையெலாம் - உனக்குண்டான சகலபாபகன்மங்களும், இன்னநீங்கிலை நிச்சயமாக - உறுதியாக இன்னமொழியவில்லை, இனத்துளபசுக்கள் - தாரதம்மியமான சீவர்களது, கருமமே - கன்மங்களே, அந்தவீசனும்பசுபதிதனக்கு - அந்த ஈசனுகிய பசுபதிக்கு, கனத்தபாசமதாம் - பெரியதாம்பாரும், அவர்களைப்பிறப்பிற்கலப்புறக்கட்டுதற்கென்று - அவர்களைப்பிறவியிற்சேரப்பிணிப்பதற்கென்று, உனற்கருமறைகள் -

மேலானவேதங்கள், பிரசித்தமாயுரைக்கும் - விளக்கமாகக்கூறு
ம், உன்னுகனன்கிதையென்ன - இதைநன்றாய் நினைக்கக்கடவா
ய்—எ-று. (தா-ம்.) பாசமாகிய கன்மம்பரிகாரமானல் தத்துவ
ஞானம் பொருந்துமென்றுகருத்து. (உ௮)

(அ-கை) சித்தசுத்திக்கு சகுணேபாசனைவேண்டுமெனல்.

ஆவதாற் சித்தந் தெளியுமட் டந்த வற்புத சகுண
மா நிறைந்த, தேவதே வனைநீ யுபாசனை புரிதி திகழ்ப
ரி பாகமுண் டாகி, பாவமில் பரம தத்துவ நிலைதான் ப
லித்திடும் நிருவிக்ன மாக, ஏவமில் சுருதி சம்மத மித
னை வியற்றுக சிரத்தையோ டென்ன.

இ-ள். ஆவதாற் சித்தந்தெளியுமட்டும் - ஆனதால் மனத்
தெளிவுண்டாம் பரியந்தம், அந்த அற்புதசகுணமாநிறைந்த-அம்
மேலான திருவுருவங்கொண்டுவிளங்கிய, தேவதேவனைநீ உபா
சனைபுரிதி - நீ மகாதேவனை உபாசனைசெய்யக்கடவாய், திகழ்ப
ரிபாகமுண்டாகி - அதனாற்கன்மவிமோசனமாகி, பாவமில்பரம
தத்துவநிலைதான் - நிராகாரமான தத்துவநிலையானது, பலித்திடு
ம்நிருவிக்னமாக - விகற்பமின்றி சித்திக்கும், ஏவமில்சுருதிசம்
மதமிதனை-இது குற்றமற்ற சுருதிசம்மதமாகும், இயற்றுகசிரத்
தையோடென்ன - இதைச்சிரத்தையோடு செய்யக்கடவா
ய்—எ-று. (தா-ம்.) சகுணேபாசனையால் சித்தசுத்தியுண்டாய்
நிர்க்குணப்பிரமசித்தியாமென்பதுசுருதிசம்மதம். (உ௯)

(அ-கை.) மூர்த்தி உபாசனையோடும் யோகாப்பியாசமும்
வேண்டுமென்கிறார்.

இத்தகு சிவோபா சனையினாற் சுத்த மெய்திய ம
னேதிடத் தாலே, அத்தனை யனேக மோகவா ரம்ப ம

ஹுருறு தமசினைச் செயித்தே, உத்தம குருசாத் திரவுப் தேசத் துற்றவிஸ் வாசவம் மனத்தால், நித்தமா யோக நிலைபெறக் கரணேந் தியநிரோ தனஞ்செய வேண்டும்.

இ-ள். இத்தகுசிவோபாசனையினுல் - இந்தமேலான சிவ த்தியானத்தால், சுத்தமெய்திய மனோநிட்த்தாலே - பரிசுத்தமா னமனோநிச்சயத்தால், அத்தகையனேக மோகவாரம்பம் - அத்த ன்மையவான அனேகமோகத்தொடர்ச்சி, அனுருறுதம சினைச் செயித்தே-உண்டான அஞ்ஞானவிருளைக்கெடுத்து,உத்தமகுருசா த்திரஉபதேசத்து - சற்குருவினிடத்திலும் சாஸ்திரவிசாரணையி லு முண்டானபோதத்தில், உற்றவிஸ்வாசவம்மனத்தால் - பொ ருந்திய சிரத்தையுள்ள வந்தமனதினுல், நித்தமாயோகநிலைபெற- நித்தியமான யோகாப்பியாசஞ் செய்யும்பொருட்டு, கரணேந்தி யநிரோதனஞ் செயவேண்டும் - பாஹியாந்தக் காரணங்களையும் இந்திரியங்களையும் நிக்கிரகிக்கவேண்டியது—எ-று.      (௩௦)

இதுவுமது.

அம்முறை சமாதி கணப்பொழு தேனு மமர்மனத் தாற்பரான் மாவை, இம்மை யிற் றரிசித் திடவத னுலே யிவண்முனந் தமசினுன் மறைந்த, உம்முயர் புந்தி பிரவிரு ளகல வுயர்கதி ருதயம துண்டாம், தம்மிரு கருமமுயற்சியே தராதோ சார்ந்திடாச் சிவனரு ளிலதேல்.

இ-ள். அம்முறைசமாதி - அங்ஙனமாகிய சமாதியில், கண ப்பொழுதேனும் - ஒருக்ஷணநேரமானுலும், அமர்மனத்தாற்ப ரான்மாவை - சாந்தமானமனதினுல் பரமாத்மாவை, இம்மையி ற்றரிசித்திடவதனுலே - இப்போதுதரிசிக்கப்பெற்றால், இவ

ன்முனந்தமசிஞன்மறைந்த - இங்குமுன்னந் தமசினன்மறைபட்டிருந்த, உம்முயர்புந்தி யிரவிருளகல - உமதுநல்ல புத்தியை மறைத்திருந்த அஞ்ஞானவிருள்நீங்கி, உயர்கதிருதயமதுண்டாம் - மேலான ஞானசூரியனுதிக்கும், தம்மிகுகரும முயற்சியேதராதோ - தாஞ்செய்யுங் கர்மாநுஷ்டானாதிகள் கொடாதோ வென்றால், சார்ந்திடாச்சிவனருளிலதேல் - சிவாநுக்கிரகமின்றியுண்டாகமாட்டாது — எ-று. (தா-ம்.) சிவாநுக்கிரகமின்றி சத்கருமங்களான் மாத்திரம் ஞானசித்தியில்லையென்றது. (ருக)

(அ-கை.) ஈஸ்வரபத்தியும் இயமாதியோகமும் வேண்டுமென்கின்றார்.

பூருவ கன்ம மிகவலி யுளது புகன்றிடி லனந்தமாதலினல், சார்தரு மவற்றைக் குலமொடா சாரந் தருமமாதியவெலற் கரிதாம், ஓர்தரிற் கடவுட்பத்திசெய் தானு முத்தியாற் புருடருக் கெட்டாத், தேர்தரு வேதம் விளக்கிய மாதி தெளியுஞா னம்பெற வேண்டும்.

இ-ள். பூருவகன்மமிகவலியுளது - முன் வினைமிகவும்வலிமையுள்ளன, புகன்றிடிலனந்தமாதலினல் - சொல்லுமிடத்து அனந்தமாகையால், சார்தருமவற்றை - உண்டான அவைகளை, குலமொடாசாரந் தருமமாதியவெலற் கரிதாம் - நல்லகுலம் ஆசாரம் தருமமுதலியவை வெல்லமாட்டாது, ஓர்தரிற்கடவுட்பத்திசெய்தானும் - நன்றாயுணருமிடத்து ஈஸ்வரபத்திசெய்தாலும், உத்தியாற்புருடருக்கெட்டா - புருடயுத்திக்கடங்காததாய், தேர்தரு வேதம்விளக்கியமாதி - தெளிவாகவேதங்கூறும் இயமநியமாதி அஷ்டாங்கயோகத்தால், தெளியுஞானம் பெறவேண்டும் - தெளிவான ஞானசித்திபெறவேண்டும் — எ-று. (தா-ம்.) வெளிப்படை.

இதுவுமது.

சகலவிக் கரும வினையெலாந் தானே சமூலமா யழிக்குமிஞ்ஞான, மிகுமுபா யத்தைச் செயநடுங் குவதேன் மேதகவிளங்குமீ சனுமே, நகவுற லலாடத் துணக்குள வெழுத்தைத் தன்கையா லிவணழித் திடுமோ, அகமுள மூலாக்கியானத்தை ஞான வருளினாற் றுடைத் தகற் றிடுமே.

இ-ள். சகலவிக்கரும வினையெலாம்-இந்தச்சகலகன்மவினைகளையும், தானேசமூலமாயழிக்குமிஞ்ஞானம் - தானேவேருடன்களையத் தக்கஞானத்தையடையும், மிகுமுபாயத்தை - மேலானயுக்தியை, செயநடுங்குவதேன் - முயர்ச்சிக்க ஏன்பயப்படுகிறாய், மேதகவிளங்குமீசனுமே - மேலாகப்பிரகாசிக்கின்ற பரமேஸ்வரனும், நகவுறலலாடத்துணக்குளவெழுத்தை- நன்றாகவுன்தலையில்பொறித்திருக்கும் விதியெழுத்தை, தன்கையாலிவணழித்திடுமோ - தன்கரத்தால் இங்கும்போக்கிவிடுவரோ, இல்லை ஆனல், அகமுளமூலாக்கியானத்தை - உள்ளத்திலிருக்கும் மூலாக்கியானத்தை, ஞானவருளினாற்றுடைத்தகற்றிடுமே-ஞானசத்தியால் அழித்துநீக்குவார்—எ-று. (௩௩)

(அ-கை.) சற்குரு உத்தமசீடன் தெளிவானசாஸ்திரம் தீர்காதிபரிபாசம் ஆகிய இவையெல்லாம் ஈஸ்வரநியதியாற் கூடுமென்கிறார்.

அனுக்கிரக நிமித்த முருக்கொடு வந்த வதீதமா யகண்டமாம் பிரமம், தனக்குள சித்தின் கலாரூப மாகச் சார்ந்திடு குருமூர்த்தி யெங்கே, மனக்கொளச் சீடன் வல்லப மெங்கே மருவுறு சமதமா திகளால், பினப்படத்

தருமோ கக்கொடி யெங்கே பேசிவை யொருப்படல் நியதி.

இ-ள். அனுக்கிரகநிமித்தம்-இரக்ஷகார்த்தமாய், உருக்கொடுவந்த - வடிவுகொண்டெழுந்தருளிய, அதிதமாயகண்டமாம்பிரமம்- வாக்கிற்கும் மனத்திற்குமெட்டாத அகண்டமானபிரம்மசுவரூபம், தனக்குள சித்தின்கலாரூபமாக - தனது சிற்கலாவடிவாக, சார்ந்திடுகுருமூர்த்தியெங்கே - ஞானுசாரியர்வரக்கிடைப்பதெங்ஙனம், மனக்கொளச்சிடன் வல்லபமெங்கே - மனதிற்பொருந்த வுணரும் சீடனது சக்தியெங்ஙனம், மருவுறுசமதமாதிகளால் - பொருந்தியசமதமம்முதலியசாதனங்களால், பிணைப்பட்டுத்தகுமோகக்கொடியெங்கே - அழியத்தக்கமோகக்கொடியின் விரிவெங்ஙனம், பேசிவையொருப்படல் நியதி - கூறிய இவைகள் ஒன்றோடொன்றுநேர்படுதல் ஈஸ்வரநியதியாம்—எ-று. இ-உக- (தா-ம்.) இவையெல்லாம் ஈஸ்வராநுக்கிரகத்தாற்கூடுமென்றுகருத்து. (௩௪)

(அ-கை.) இவையெல்லாங் கூடியபோது மோகநீங்கமுயலவேண்டுமல்லது சோகமடையத்தகாதென்கின்றார்.

சிந்தனைக் கெட்டாப் பெருமித முடைய சிவனருணியதியீ திதனுல், இந்தமா மோகந் தனைவிவேகத்தாலிகந்திடப் பாரத்வாஜவிதனுல், மூந்துறு மஞ்ஞானங்கெட ஞானமுறுமசா தாரணமாக, சந்தய மிதனில் லினின் போல்வார் சார்ந்திடத் தக்கதே கண்டாய்.

இ-ள், சிந்தனைக்கெட்டா - மனதிற்களவுபடாத, பெரிமிதமுடைய - பெருமையையுடைய, சிவனருணியதியீது - சிவாநுக்கிரகசத்தியிதுவாம், இதனுல் இந்தமாமோகந்தனை - இந்தமகா

மோகத்தை, இகந்திடப்பரத்துவாஜ-பரத்துவாஜனே நீக்கக்கட வாய், இதனால் முந்துறும் அஞ்ஞானங்கெட - முன்புள்ள அஞ் ஞானம்நீங்கி, ஞானமுறுமசாதாரணமாக - இயல்பாக மெய்ஞ் ஞானமுண்டாகும், சந்தயமிதனிலில்லை - இதிற்சந்தேகமில்லை, நின்போல்வார்சார்ந்திடத்தக்கதேகண்டாய் - நின்னைப்போன்ற விவேகிகளடையத்தக்கதாம்—எ-று. (௩௫)

(அ-கை.) சகாயமுடையவர்களுக்கு பெருங்காரிய சித்தி யெளிதிலாமென்கின்றார்.

மகாபல முடைய வரசனே யுத்த மாகிய வாபத்து வரினும், சகாயமா மிடம்பொன் னேவலே முதலாஞ் ச ம்பத்து மிகவுடை மையினால், தகாவய லோர்கள்நினை க்கவு மரிதாஞ் சகரக்ஷை துஷ்டநிக்கிரகம், அகாதமாயி னுமாக் கினையினான் முடிக்கு மற்பமுஞ் சிறியர்காக்க ரிதே.

இ-ள். மகாபலமுடையவரசனே - மிகுந்தவல்லமையுள்ள இராஜனே, உயுத்தமாகிய வாபத்துவரினும் - சண்டைமுதலிய அபாயம்வந்தாலும், சகாயமாமிடம் பொன்னேவலேமுதலாம் - உதவியான இடம் பொருள் ஏவல்முதலான, சம்பத்துமிகவுடை மையினால் - மிகுந்த செல்வமிருத்தலால், தகாவயலோர்கள்-அ வ்வியல்பில்லாத எளியவர்கள், நினைக்கவுமரிதாம்-எண்ணவுங்கொ ள்ளவுங்கூடாத, சகரக்ஷைதுஷ்டநிக்கிரகம் - பூமியைக்காத்தலி த்தல் துஷ்டரைத்தண்டித்தலிவை, அகாதமாயினும் - பெரிதா னாலும், ஆக்கினையினான்முடிக்கும்-அதிகாரத்தால் முடிக்கவல்ல வனாவன், அற்பமுஞ் சிறியர்காக்கரிதே - கொஞ்சகாரியமானாலு ம் சிறியவர்கட்கு அருமையாம்—எ-று. (௩௬)

(அ-கை.) புண்ணியமிகுதியால் போதமுண்டாமென்றறிந்து முயலும்படி பரத்துவாஜருக்கு சீவன்முத்தர் திருஷ்டாந்தத்தால் நிஷ்காமகர்மபலவிசேஷத்தை கூறுகின்றார்.

அனேகசென்மாந்திர புண்ணிய பலத்தா லடைந்திடு ஞானமங் கதனை, மனோதெளி வுடைய ஞானியா முத்தர் மகிமையா லநுமதித் திடலாம், உறுதசத் துருவா மெக்கரு மத்தா லுற்றிடு மிச்சமு சாரம், தனதுமித் துருவாங் கன்மமே முத்தி தருவதா மிராகநீத் திடினே

இ-ள். அனேகசென்மாந்திர புண்ணியபலத்தால் - அனந்தசென்மங்களிலுண்டான நல்வினைப்பயனால், அடைந்திடுஞானமங்கதனை - பெறத்தக்கஞானசித்தியை, மனோதெளிவுடைய - மனத்தெளிவுள்ள, ஞானியாமுத்தர்மகிமையால் - ஞானமடைந்தசீவன் முத்தர்களதுகுணங்களால், அநுமதித்திடலாம் - பிரமாணமாகவறியலாம், உறுதசத்துருவாமெக்கருமத்தால் - கினைக்கப்பட்டாதபகையான எந்தக்கருமத்தால், உற்றிடுமிச்சமுசாரம் - இந்தசம்சாரபந்தமுண்டாயிருக்கிறதோ அதையும், தனதுமித்துருவாங்கன்மமே - தனதுரிமையான சத்கருமங்களே, முத்திதருவதாமிராக நீத்திடினே - இச்சையின்றி ஈஸ்வரார்ப்பணமாகச் செய்தால் முத்தியைக் கொடுக்குமென்றும் உணரக்கடவாய் — எ-று. (தா-ம்.) இராக மிகுந்தால் புண்ணியபந்தகமாமென்றும் அஃதின்றேல் அப்புண்ணியகன்மமே மித்திரனாயிருந்து மோக்ஷயேதுவாமென்றுங் கருத்து. (௬எ)

(அ-கை.) நிஷ்காமபுண்ணியமிகுதியால் பாபமழிந்து சமந்தமமுதலான சத்குணங்களான அமிர்தத்தினால் திர்ப்தியடைந்தவர்களுக்கு தாபத்திரயமொழியு மென்கின்றார்.

மழைப்பெரு வெள்ள முயிர்க்குலதாப வனக்கனை
ல் தணித்துத வுதல்போல், இழைத்துள புண்ணிய மி
குதிசா துகளுக் கிருந்துள பாபகன் மத்தை, ஒழித்துத
வியதாஞ் சம்சார சக்ரத் துறுசுழ றீர்ந்திட வேண்டில்,
இழித்திடு கன்ம மியாவையும் விடுத்தே யிசைதரப் பிர
மத்தில் விருப்பாய்.

இ-ள். மழைப்பெருவெள்ளம் - மழையிலுண்டான பெரு
வெள்ளமானது, உயிர்க்குலதாபவனக்கனல் - உயிர்களுக்குண்
டாகுந் தாபாக்கினியை, தணித்துதவுதல்போல் - நீக்கியுதவிசெ
ய்தல்போல, இழைத்துளபுண்ணியமிகுதி - செய்யப்பட்ட இந்
தப்புண்ணியமிகுதியானது, சாதுகளுக்கிருந்துளபாபகன்மத்தை -
சத்துக்களுக்கு முன்புள்ளபாபகன்மங்களை, ஒழித்துதவியதாம் -
நீக்கிவுதவிசெய்யும், சம்சாரசக்ரத்து - சம்சாரமாகிறசக்கரத்தில்,
உறுசுழல் தீர்ந்திடவேண்டில் - உண்டான அலைவுதீரவேண்டுமா
ருல், இழித்திடுகன்மமியாவையும்விடுத்தே - இழிவான சகலகரு
மங்களையும்விட்டு, இசைதரப்பிரமத்தில்விருப்பாய் - பிரமசுவ
ரூபத்தில் விருப்பமுற்றிருக்கக்கடவாய்—எ-று. (தா.ம்.) புண்
ணியமேலிட்டால் பாபம்நசித்து வைராக்கியந் திடப்படும்போ
து பரமபத்தியுண்டாய் சம்சாரஅலைவு நீருமென்றுகருத்து. (௩௮)

(அ-கை.) அதையின்னும் வற்புறுத்திக் கூறுகின்றார்.

எதுபரி யந்தம் வெளிமுகப் பார்வை யிருக்குமவ்
வளவுமே விகற்பத், திதியுறு பிரபஞ்ச பாவனை தோன்
றுஞ் செழுங்கடலலையசை வுளதேல், உதைந்திடுங்கரை
யை யொழிந்திடி னிலைத்த வுதகமே போலுமெய்ப் பிர
மம், சுதந்தர வடிவாய் நிறைந்திடிற் சோகந் தோன்றி
டா தெனத் துணி மகனே.

இ-ள். எதுபரியந்தம் - எதுவரையில், வெளிமுகப்பார்வை- விடையநோக்கம், இருக்குமவ்வளவுமே - இருக்கின்றதோ அதுவரையில், விகற்பத்திநியுறு - விகற்பசங்கற்பத்திலுண்டான, பிரபஞ்சபாவனைதோன்றும் - இந்தப்பிரபஞ்சதோற்றமுண்டாயிருக்கும், (அஃதெங்ஙனமென்னில்) செழுங்கடலலையசைவுளதேல் - பெரிய சமுத்திரங்கள் அசைந்துகொண்டிருந்தால், உதைந்திடுங்கரையை - கரையில்வந்து மோதிக்கொண்டிருக்கும், ஒழிந்திடில் - அலையின்றேல், நிலைத்தவுதகமேபோலும் - நிலைத்தசலமாயிருத்தல்போல, மெய்ப்பிரமம் - சத்தியமானபிரமம், சுதந்தரவடிவாய்நிறைந்திடில் - பூரணசுவஸ்சொரூபமானல், சோகந்தோன்றிடாதெனத்துணிமகனே - மகனே சோகமுண்டாகாதென்று திடமாயிருக்கக்கடவாய்—எ-று. (௬௬)

இதுவுமது.

விவேகநோக்கத்தை மறைக்குமிச் சோகமேவுற
நினைப்பிடித் திடலென், தவாதசோகத்தாற் குருடனுமு
னக்குத் தக்கவவ் விவேகக்கண் டிறக்குஞ், சுவாதினம்
வருமட் டசைவறத் திடமாந் துணைஞான வூன்றுகோ
லொன்றே, விவாதமெத் தனைவந் திடினுநின் றன்னைமெ
ல்லென நடத்திடவேண்டும்.

இ-ள். விவேகநோக்கத்தை - விவேகதிருட்டியை, மறைக்குமிச்சோகம் - மறைக்கின்ற இந்தத்தளர்ச்சி, மேவுறநினைப்பிடித்திடலென் - உன்னைப்பற்றி யுண்டாவதேன், தவாதசோகத்தால் - நீங்காத இந்தச்சோர்வால், குருடனுமுனக்கு - அந்தகனுவுனக்கு, தக்கவவ்விவேகக்கண்டிறக்கும் - தகுதியான ஞானக்கண்விளங்கும், சுவாதினம்வருமட்டும் - சுவாதீனமுண்டாம்வரையில், அசைவறத்திடமாம்-அசைவின்றியுறுதியான, "துணை

ஞானஆன்றுகோலொன்றே - உதவியான ஞானத்தண்டமொன்றுமே, விவாதமெத்தனைவந்திடினும் - எத்தனைவிகற்பம்வந்தாலும், மெல்லெனநடந்திடவேண்டும் - பையநடந்திளைக்கத்தக்கது—எ-று. (இ-உ-க-நா-ம்.) சோகம் விவேகத்தைமறைக்குமாதலால் ஞானஆன்றுகோலைப்பற்றி நடக்க வேண்டுமென்று கருத்து. (௬0)

இதுவுமது.

தரங்கநின் றலைக்குந் திரணமே போலச் சந்தோடம் விதனமென் றிவற்றின், அரந்தைசெய் பங்க முற்சாகமென்னு மலைகளாற் பவக்கட லலைவோர், திரம்பெறுபெரியோர் குழுவொடு மெண்ணைச் சேர்ந்திடார் திரம்பெற வேண்டில், நிரந்தர மனோவா யுவையகத் தடக்கி நிச்சலனம்பெற வேண்டும்.

இ-ள். தரங்கநின்றலைக்கும் - அலைகளினு லலைக்கப்பட்ட, திரணமேபோல - துரும்பையொத்து, சந்தோடம்விதனமென்றிவற்றின் - மகிழ்ச்சிசோகமென்னு மிவற்றால்; அரந்தைசெய் பங்கமுற்சாகமென்னும் - துன்பஞ்செய்கின்ற மஞ்னமும் செருக்குமென்கின்ற, அலைகளாற்பவக்கடலலைவோர் - அலைகளினாற் பவசாகரத்துழலுகின்றவர்கள், திரம்பெறுபெரியோர்குழுவொடும் - நிலைபெற்றபெரியோர் கூட்டத்தில், எண்ணைச்சேர்ந்திடார் - எண்ணிக்கையிற்சேரார், திரம்பெறவேண்டில் - நிலைபெறவேண்டுமானல், நிரந்தரமனோவாயுவையகத்தடக்கி - மனவசைவை புறத்திற்செல்லவொட்டாது நிறுத்தி, நிச்சலனம்பெறவேண்டும் - சாஞ்சல்லியந்தீர்ந்து இருக்கவேண்டும்—எ-று. (நா-ம்.) சந்தோசத்தில் உற்சாகமே அலை, விதனத்தில் பங்கமே அலை, ஆதலால் இந்தஅலைகளிலகப்பட்டு அலைகின்றவர்கள் பெரியோர்குழுவிலெண்ணிக்கையுறுரென்று கருத்து. (௬௧)

(அ-கை.) காலதத்துவத்தின் தன்மையைக் கூறுகின்றது.

பகலிரவென்னுங் காலதத்துவத்தாற் பற்பல வுயிர்க்குலசமூகம், சுகமுறுசந்தோ டத்தொடுவிதனஞ் சூழ் திசை யாகுமூ சலிலே, தகவுற வேற்றப் பட்டறு வகையாந் தளர்வுறு மாட்டமா டுவதால், அகமெலிந் திட்டலென் காலமே சகத்தை யளித்தழித் திடும்பல முறையே.

இ-ள். பகலிரவென்னுங் காலதத்துவத்தால் - பகல் இரவு என்கின்றகாலதத்துவத்தினால், பற்பலவுயிர்க்குலசமூகம் - பலவிதமான சீவகோடிகள், சுகமுறுசந்தோடத் தொடுவிதனம்-சுகிக்கின்ற இன்பதுன்பமாகிய, சூழ்திசையாகுமூசலிலே - அநுபோகபேதமென்னும் உஞ்சலிலே, தகவுறவேற்றப்பட்டு-தகுதியாக ஏற்றப்பட்டு, அறுவகையாந் தளர்வுறுமாட்டம் - ஆறுவகையான மெலிவுண்டாகுமாட்டங்கள், ஆடுவதால் - ஆடுகின்றதால், அகமெலிந்திட்டலென் - மனந்தளர்வானேன், காலமேசகத்தை - காலதத்துவந்தான் இந்தவுலகத்தை, அளித்தழித்திடும்பலமுறையே - பலதரம் உண்டாக்கி அழித்துக்கொண்டிருக்கும்—எ-று. (தா-ம்.) ஆறுவகையாட்டங்களாவன-சுரோமி. அதாவது: சட்பாவவிகாரம், காமாதியாறு, ஆறுருதுக்கள், முதலானவையாம். சகத்தின் உற்பத்தி-திதி-நாசங்கள் காலவிளையாட்டென்றறிக. விளையாடுவோன் கற்பித்தவஸ்துக்கள் கூடிப்பிரிவதில் சோகத்திற் கிடமில்லையென்று கருத்து. (௬௨)

(அ-கை.) காலதத்துவத்தை சர்ப்பமாகவுவமித்தல்.

காலமாம் பெரிய சர்ப்பமாக் கிரமித்துக் கடிதுணைப் பற்றிடு முயிர்க்குள், எலுமீ திவைக ளென்றிடாதென்ன விருந்ததொன் றிலையே தமதாய், மேலதாந் தே

வர் கணங்களு மதற்கு விரும்பிய புசிப்பெனப் படுமே ல், சாலவோர் கணமு நிலையிலா மாந்தர் சரீரமோ பெரி தெலாங் கொளுமே.

இ-ள். காலமாம்பெரியசர்ப்பம் - காலதத்துவமென்னும் பெரியபாம்பானது, ஆக்கிரமித்து - வேகங்கொண்டு, கடி-துணைப் பற்றிடுமுயிர்க்குள் - விரைவாகப்பிடிக்கின்ற வுயிர்களுக்குள்ளே, எனுயீதிவைகளென்றிடாதென்ன - இதுதகுந்தகாதென்று சொல்லும்படி, இருந்ததொன்றிலை - மிகுந்துநின்றது ஒன்றுமில்லை, அபேதமதாய் - பேதமின்றி, மேல்தாந்தேவர்கணங்களுமதற்கு, விரும்பியபுசிப்பெனப்படுமேல் - விருப்பமானவுணவாகுமென்றால், சாலவோர்கணமுநிலையிலாமாந்தர் - ஒருக்ஷணப்போதும் நிலைமையில்லாதமனிதர்களது,சரீரமோபெரிதெலாங்கொளுமே- தேகமா பெரிதானது எவற்றையும் உட்கொள்ளும்—எ - று. (தா-ம்.) காலதத்துவத்தால் தேவ மனித சரீரமுதலான எவையுமழியுமென்று கருத்து. (௩௩)

(அ-கை) சாக்ஷியானநீ தன்முதலிய பொருளழிவுவந்தால் சோகமடையலாகா தென்கிறார்.

தனமுதற்பொருள்க ளிழந்திடும்விபத்து சார்ந்திடில் விவேகநோக்கின்றி, துனிதர விரங்கும் விகாரவிந்தி யனுத் துன்புற நடித்திட லென்னே, கனனுறக் கணப் போ தசைவறநின்று கலங்குமிச் சமுசார நடனம், மன னுறக் கண்டு மகிழ்ந்தன்யமாக மதித்திடப் பெறிற்சோ க மெங்கே,

இ-ள். தனமுதற்பொருள்கள் - பொன்முதலான திரவியங்கள், இழந்திடும்விபத்து சார்ந்திடில்-நீங்குகின்ற விபத்துவந்

தால், விவேகநோக்கின்றி - விவேகத்தால் சமமாகப்பாராமல், துனிதரவிரங்கும்விகாரவிந்தியனு - துன்புற்றுவருந்துகின்ற சித்தமுடையவனுகி, துன்புறநடித்திடலென்னே - துயரப்பட்டுதிரிவதேன், கணனுறக்கணப்போது - மேன்மையாய் ஒருக்ஷணநேரம், அசைவறநின்று - அசையாமல்நின்று, கலங்குமிச்சமுசாரநடனம் - கலக்கமுறுகின்ற இந்தசமுசாரக்கூத்தை, மனனுறக்கண்டு - மனதிற்பகுத்துணர்ந்து, மகிழ்ந்தன்யமாகமதித்திடப்பெறில் - தான் இவைக்கன்னியமென்று சுகிக்கப்பெற்ருல், சோகமெங்கே - சோகமோகங்கள்எங்கே உண்டாகும்—எ-று. (௯௪)

இதுவுமது.

ஓய்பரத்துவாஜ நண்ப நீடிளாக ளுடையதாய்க் கணத்தினி லழிந்து, மாய்தரு சகத்தைக் காண்பதிற்சோக மருவுறர் விவேகிகள் சிறிதும், ஏய்தரு நீயு மமங்கல சோக மிகந்திடச் சுமங்கல நினைதி, ஆய்தரு ஞானு னந்தமே கனமா மமலாத்ம தியானமே புரிதி.

இ-ள். ஓய்ப்ரத்துவாஜநண்ப - ஓசிநேகனுன ப்ரத்துவாஜனே, நீடிளைகளுடையதாய் - நீண்டஅலைகளுள்ளதாய், கணத்தினிலழிந்து மாய்தருசகத்தை - ஒருக்ஷணநேரத்தில் அழிந்துபோகின்ற பிரபஞ்சத்தை, காண்பதில்,சோகமருவுறர்விவேகிகள்சிறிதும் - விவேகிகள் இலேசமும் சோகமடையார்கள், ஏய்தருநீயு மமங்கலசோகமிகந்திட - விவேகியானநீயும் அசுபமான சோகத்தைவிடக்கடவாய், சுமங்கலநினைதி - சுபங்களையேநினைக்கக்கடவாய், ஆய்தருஞானுனந்தமேகனமாம் - ஆராயப்பட்ட ஞானுனந்தக் கட்டியான, அமலாத்மதியானமேபுரிதி - நிர்மலாத்மசுவரூபத்தை தியானிக்கக்கடவாய்—எ-று. (௯௫)

(அ-கை.) சிந்தனைசெய்யக்கூறிய சுபங்களிவை யென்கின்றார்.

தேவர்வே தியர்நற் குரவர்பால் வைத்த சிரத்தை
யாற் கவின்பெறு சித்தம், ஓவறச் சிறந்த வேதசாத் திர
த்தி லுறுதியாம் பிரமாணமதுடையோர், மூவராய்முத
லாஞ் சிவனருளடைவார் மோக்ஷகாரணமதா ஞானம்,
மேவுவர் பரம சுபமுமத் துவைத விமலவா சனையுமுண்
டாமே.

இ-ள். தேவர்வேதியர் நற்குரவர்பால்வைத்த-தேவர் பிரா
மணர் சற்குருஇவர்களிடத்துண்டான, சிரத்தையாற்கவின்பெறு
சித்தம் - விஸ்வாசத்தாற் சிறப்புற்றமனம், ஓவறச்சிறந்தவேத
சாஸ்திரத்தில் - மிகவுஞ்சிறப்பான வேதசாத்திரங்களில், உறுதி
யாம் பிரமாணமதுடையோர்-நிலையான நம்பிக்கையுடையவர்க
ள்,மூவராய்முதலாஞ் சிவனருளடைவார்-மும்மூர்த்திகளாயும்மு
தன்மையாகவுமிருக்கின்ற சிவாநுக்கிரகம்பெறுவார்கள்,மோக்ஷ
காரணமதாஞானம் - மோக்ஷஹேதுவான ஞானத்தையும், மே
வுவர் - அடைவார்கள், பரமசுபமு மத்துவைதவிமலவாசனையுமு
ண்டாமே - ப்ரமமங்களமும் அத்துவைத சத்வாசனையுமுண்டா
கும்—எ-று. (தா-ம்.) தேவர்முதலானவரிடத்து விஸ்வாசமும்
வேதசாஸ்திரத்தில் நம்பிக்கையும் ஈஸ்வராநுக்கிரகங் கிடைப்ப
தற்கேதுவான மங்களகுணமென்றும் அவ் வீஸ்வராநுக்கிரகம்
மோக்ஷஞானத்திற்கு ஏதுவாகையால் பரமமங்களமென்றுங் க
ருத்து. அவ்வாறு ஈஸ்வராநுக்கிரகத்தினால் அருமையாய் சிலருக்
கே அத்துவைதவாசனையுண்டாகிறதென்று பிரமாணம். (௬௧)

(அ-கை.) ப்ரந்துவாஜவாக்கியம். இரிசியமான பிரபஞ்சத்
தை லயப்படுத்துமுபாயமும், வசிட்டர் விரிவாகக்கூறிய ஞானா
ர்த்த சாரத்தையும் சுருக்கமாயெடுத்துக்கூற வினவுகின்றார்.

தேவரீ ரருளா லிவையெல்லா முற்றுந் தெளிந்தன னெங்ஙன மென்னில், ஆவறீர் வைராக் கியத்தின்மேற் பந்து வறிகிலே னிச்சமு சார, பாவனை யதனிற் பகையி லை வசிட்டர் பற்பல நூற்பொருள் விரித்து, நாவின்வ ல் லபத்தாற் புகல்ஞான சாரம் நயம்பெறச் சுருக்கியீங் கருள்வீர்.

இ-ள். தேவரீரருளாலிவையெலாமுற்றுந் தெளிந்தனன் - குருவே? தமதுகிருபையால் இவை முழுதுந் தெளிவாகவுணர்ந் தேன், ஆவறீர்வைராக்கியத்தின்மேற்பந்துவறிகிலேன் - அவா நீங்கிய விராகத்தைவிட மேலானதுணை வேறுகாணேன், இச் சமுசாரபாவனையதனிற் பகையிலை- இந்த சமுசாரவிவகாரத்தை விடசத்துருவேறில்லை, வசிட்டர் பற்பலநூற்பொருள் விரித்து- வசிட்டமுனிவர் பலவாயசாஸ்திரங்களின்பொருளை விஸ்தரித் து, நாவின்வல்லபத்தால் - வாக்கின்வல்லமையால், புகல்ஞா னசாரம் - உரைத்தருளிய ஞானசாரமான ரகசியங்களை, நயம் பெறச்சுருக்கி யீங்கருள்வீர் - யான் பயனடையும்பொருட்டு சு ருக்கமாகவுரைத்தருளல் வேண்டும்—எ-று. (௬௭)

(அ-கை.) பரத்துவாஜர் வினவுக்கு வான்மீகரிஷி விடை கூறுகின்றார்.

எப்பொரு டன்னைக் கேட்டமாத்திரத்தி லிச்சமு சாரசா கரத்தில், தப்புறவீழா திருந்திடப் பெறுவை த குமிகு மோக்ஷசா தனமாம், அப்பர ஞான ரகசியந் தெ ளிவா யறைகுவன் பரத்துவாஜ வதனைச், செப்பமாப் பு ந்தி யொருப்படாநின்று தெளிதரக் கேட்டியென் றிசை ப்பான்.

இ-ள். எப்பொருட்டன்னைக் கேட்டமாத்திரத்தில் - எந்த அர்த்தத்தைக்கேட்டவுடனே, இச்சமுசாரசாகரத்தில்-இந்தச் சமுசாரசமுத்திரத்தில், தப்புறவீழா திருந்திடப்பெறுவை - தவறிவீழ்ந்திடாதிருக்கச் சித்திக்குமோ, தகுமிகுமோக்ஷசாதனமாம் - தகுந்தமோக்ஷசித்திக்கேதுவான, அப்பரஞானரகசியம் - அந்த மேலான ஞானாந்தரங்கத்தை, தெளிவாயறைகுவன் பரத்துவாஜ - ஓ பரத்துவாஜனே சொல்லுகின்றேன், அதனை செப்பமாப் புந்தியொருப்படநின்று-அதை செவ்வையாய் ஏகாக்கிரசித்தமாயிருந்து, தெளிதரக்கெட்டியென்றிசைப்பான்-திருத்தமாகக் கேளுமென்று கூறுவார்—எ-று. (௬அ)

(அ-கை.) உபாசனாமூர்த்தியை தியானஞ்செய்துகொண்டு சொல்லுகிறார்,

எந்தமா தேவ னேகமா யிருந்து மிப்பல சிருட்டியா திகளால், தொந்தமா யனேக வடிவமாய் விளங்கித தொன்மையாய் நிறைந்தருள் வடிவாம், எந்தையா மந்த சச்சிதானந்த விறைவனை வணங்கியிப் பிரபஞ்சம், வந்தவா றந்த வுண்மையில் விளங்கி வதிந்தவா றறிந்தவாறுரைப்பாம்.

இ-ள். எந்தமாதேவன்- எந்தமகாதேவர், ஏகமாயிருந்தும்-தாமொருவராயிருந்தும், இப்பலசிருட்டியாதிகளால் - இந்தசிருட்டி திதிலயபேதவிர்த்திகளினால், தொந்தமாயனேக வடிவமாய் விளங்கி - தொடர்பாய் அனேகமூர்த்தமாகப் பிரகாசித்து, தொன்மையாய்நிறைந்தருள் வடிவாம்-புராதனபூரண நிர்ப்பரூபமாயிருக்கின்றனரே, எந்தையாமந்த - என்தந்தையான அந்த, சச்சிதானந்தவிறைவனைவணங்கி - சச்சிதானந்த சுவரூபமானகடவுளைவணக்கஞ்செய்து, இப்பிரபஞ்சம்வந்தவாறு - இந்தச் சகத்

தோன்றிய பிரகாரம், அந்தவுண்மையில்விளங்கி - அப்பரம்பொ ருளில்விளங்கின்று, வதிந்தவாறறிந்தவா றுணைப்பாம் - அதனி ல் லயித்தமுறையே யான்அறிந்தபடி கூறுகின்றேன்—எ-று.()

(அ-கை.) அங்ஙனம் பிரிதிக்கிணைசெய்து பல்வாற்றுற்கூ றினும் முன்பின்கூட்டியறியத்தக்க நினதுசுக்குமபுத்தியேன் மருண்டதென்றதட்டி மேல் மாண்டூக்கிய உபநிடத தாற்பரியத் தை ஆழ்ந்தறியும்படி கூறுகின்றார்.

மன்னுமிப்பிரபஞ்சம் லயப்படிற்றத் துவம் வயங்கு மாண் டூக்கியம தென்னப், பன்னுப நிடதங் கூறிய மு றையே பகருதுஞ்சுருக்கமாய் நினக்கு, முன்னொடு பின் னுங் கூட்டிநன்குணரு மதிருநின் புந்தியேன்மருண்ட, தன்னதே யங்கை நெல்லிபோற் காண வறிதரு மாழ்ந்தி டப் பெறினே.

இ-ள். மன்னுமிப்பிரபஞ்சம் - தோற்றுகின்ற இந்தச்சகம், லயப்படிற்றத்துவம்வயங்கும் - இலயமானுல் உண்மைப்பொரு ள்விளங்குமோ அந்த, மாண்டூக்கியமதென்னப் பன்னுபநிடதம்- மாண்டூக்கியமென்றுசொல்லும்உபநிடதத்தில், கூறியமுறையே- கூறியபிரகாரம், பகருதுஞ்சுருக்கமாய்நினக்கு-நினக்கு சம்க்ஷேத பமாக சொல்லுகின்றோம், முன்னொடுபின்னுங் கூட்டிநன்கு ணரும் - முன்கூறியதும் பின்கூறுகின்றதும் கூட்டியூகித்தறிய வல்ல, மதிருநின்புந்தியேன்மருண்ட-நல்ல தெளிவுள்ள நின்பு த்தியேன் மயங்கிப்போயிற்று, அன்னதேயங்கை நெல்லிபோற் காண - உள்ளங்கைநெல்லிக்கனிபோல அப்புந்தியே தோன்ற,அ றிதருமாழ்ந்திடப்பெறினே - சாவதானமாய் அழுந்துமானுல் தெளிவா யுணருமென்றுகூறி மேற்சுருக்கத்தால் சொல்லத்தொ டங்குகின்றார்—எ-று. (௩௦)

பாரத்வாஜ அநுசாஸனம் முற்றிற்று.

---

சிவமயம்.

# வசிஷ்டமுனிவர் ஸ்ரீராமருக்கு

உபதேசித்தருளிய

# ஞானவாசிட்ட வமலராமாயணம்.



## நிருவாணப்பிரகரணம்.

## இராம வியுத்தாபனம்.

வியாக்கியானகவி.

இலகுமிச் சருக்கந் தத்துவத் தகில மிறப்பதும் ப்ரத்துவா ஜன்றன், நலமுறு பேறும் ஞானிக ளியல்பாய் நவையறப் புரிதரு செயலும், புலமுறு மிராமன் சமாதியின் றெழுந்து புரிதரு விவகார நெறியும், பலமுற யார்க்கும் பண்புறத் தெளிவாய்ப் பகர்ந்திடப் படுவனமுறையே.



## அவதாரிகை.

ஸ்ரீவான்மீகமகாரிஷி வாக்கியம். முமுட்சுவானவன் சாந்தனாய், உபரதனாய், திதிட்சுவாய், சிரத்தாவானாய், சமாஹிதனாய் இருந்து தனக்குள்ளே தன்னைக் காணுகிறானென்னுஞ் சுருதியின்கருத்தை வர்ணித்து அந்நெறியே சாட்சாத்காரம்வருமட்டும் பிரபஞ்சத்தைக் காரணத்தில் இலயப்படுத்தும் விதத்தை சாங்கமாகக் கூறத்தொடங்குகின்றார்.

கவிதை.

சாந்தனாய்த் தாந்தனாகித் தபுகன்மங் காம்யகன்மம்
பாந்தவிந் திரியச்சார்பாம் பல்சுக மிவற்றைநீத்து
ஆந்திகழ் சிரத்தையோடு சுகாசனத் தமர்ந்துசித்தம்
போந்தவிந் தியவியாபாரம் பொருந்துறா மனத்தனாகி.

இ-ள். சாந்தனாய் - சமமுள்ளவனாகவும், தாந்தனாகி-தமமுள்ளவனாகவும், தபுகன்மம்-நிஷித்தருமமும், காம்யகன்மம்-காமியகருமமும், பாந்தவிந்திரியச் சார்பாம் - ஒழுங்கான இந்திரியங்களின் சேர்க்கையாலுண்டாகும், பல்சுகமிவற்றைநீத்து-பலவிடய சுகங்களையும்விட்டு, ஆந்திகழ்சிரத்தையோடும் - நல்லசிரத்தையுடன், சுகாசனத்தமர்ந்து - மிருதுவான ஆசனத்திலிருந்து, சித்தம்போந்த விந்திய வியாபாரம் - சித்தஞ்செல்லுகின்ற இந்திரியத்தொழில்களை, பொருந்துறாமனத்தனாகி-செய்யாதமைந்த மனமுடையவனாக—எ-று. (தா-ம்.) சமதமாதிசாதனங்களுடையவனாய் - சுகாசனத்திருந்து இந்திரிய விஷயங்களில் மனஞ்செல்லாதடக்க வேண்டுமென்றது. (க)

(அ-கை.) ஞானயோகமார்க்க முரைக்கின்றார்.

பிரணவ மோமென்றோதிப் பிரிமன நிலையாமட்டும்
கரணங்கள் சுத்தியாகக் கருதுபிரா ணயாமஞ்செய்
புரையுறு விடயமேவிப் போகுமிந் திரியமைந்தை
விரகொடு மெல்லவுள்ளே மேவுற நிறுத்தல்வேண்டும்.

இ-ள். பிரணவமோ மென்றோதி - பிரணவமந்திரத்தை ஓமென்றுச்சரித்து, பிரிமனநிலையாமட்டும் - பிரவிர்த்திக்கின்ற மனம்நிலை பெறும்வரையில், கரணங்கள் சுத்தியாக - அந்தக்கரணங்கள் சுத்தமாக, கருதுபிராணயாமஞ்செய் - ஊகித்துப் பிரா

ஞாயாமஞ்செய்வாயாக, புரையுறுவிட்யமேவி - குற்றமானவிஷ யங்களிற்சென்று, போகுமிந்திரிய மைந்தை-திரிகின்ற பஞ்சே ந்திரியங்களை, விரகொடுமெல்லவுள்ளே - விரகொடுமெல்ல உள் ளத்தின்கண், மேவுறநிறுத்தல்வேண்டும் - அடங்கநிறுத்தவேண் டும்—எ-று. (தா-ம்.) பிரணவமோமென்றோதி யென்றது-அதை தீர்க்கமாகவாவது புசுண்டயோகி உபாக்கியானத்திற்கூறியபடி அளபெடையாகவாவது உச்சரிக்கவேண்டுமென்று கருத்து. (உ)

(அ-கை.) உற்பத்தியாதி லயக்கிரமங்கூறுகின்றார்.

தேகமிந் திரிய மனந்தெளி புந்திதிகழ்சீவ னிவற்றி
னுற் பத்தி, ஆகிய விவைகள் தோன்றிய பூத மதிதேவர்
சுருதியிற் புகன்ற, பாகமா மவற்றி லயமுறப் புரிந்து ப
கரதின் முதல்விராட் புருடன், வாகதி னின்று மிரணிய
கருப்பன் மருவிமே லவ்வியா கிருதன்.

இ-ள். தேகமிந்திரியமனந்தெளிபுந்தி-தேகம் இந்திரியங்க ள் மனம் தெளிந்தபுத்தி, திகழ்சீவனிவற்றினுற்பத்தி-விளங்குகி ன்றசீவன்இவைகளின்உற்பத்தி, ஆகியவிவைகள்தோன்றியபூத ம்-ஆன இவைகள் உண்டானபூதங்களும், அதிதேவர்-இவற்றின் அதிதேவர்களும், சுருதியிற்புகன்ற-வேதத்திற்கூறிய, பாகமாம வற்றிலயமுறப்புரிந்து-பிரிவான அவ்வவற்றில் இலயஞ்செய்து, பகரதில்-(வியஷ்டியாகக்கூறிய)அவற்றினின்றும்,முதல்விராட் புருடன்-முதல்சமஷ்டிகாரணமான விராட்புருடனிடத்திலும், வாகதினின்றும் இரணியகருப்பன்- அதினின்றும் இரணியகரு ப்பனிடத்திலும், மருவிமேலவ்வியாகிருதன் - அதினின்றும்மே ல் அவ்வியாகிருதனிடத்திலும் (இலயஞ்செய்க)—எ-று. (தா-ம்.) அத்தியாதமீகமானவியஷ்டிதேகேந்திரியாதி யாகாரத்தைவிட்டு ஷ்தேவதா சமஷ்டிகாரணமாய் அகரத்தின்பொருளான விராட்டின்

வரூபத்தில்நின்றுபின்உகாரத்தின்பொருளான சூக்குமலிங்க சம ஷ்டி ஸ்வரூபமான இரணியகருப்பனுக விராட்டைலயப்படுத்தி நின்றுபின்பு அவற்றின்காரணமாய் முக்குணவடிவாய் மாயோ பாதியுள்ளதாய் மகாரத்தின்பொருளான அவ்வியாகிருதத்தில் நின்று மேல் இவைகட்கெல்லாம் அதிஷ்டானமாய் அமாத் திரையாகக் குறிக்கப்பட்ட சுத்தப்பிரமத்தில் அவ்வியாகிருதத் தையும் லயப்படுத்தி நிற்கவேண்டுமென்றுகருத்து. (௩)

இதுவுமது.

பரமகா ரணமா மவைக்கதிஷ்டான பரிசுத்த பிரம மாய் நிற்க, விரவுமாம் சாதி பிரிதிவி தன்னின் மேவிரத் தாதிகள் சலத்தில், திரமுறு தேயு செறிதேயு வதனிற்றி கழ்வாயு மகாவாயு தன்னில், உரவுட லாகா யம்மகா கா யத் தொன்றதாய் லயஞ்செயப் படுமே.

இ-ள். பரமகாரணமாம் - மேலானகாரணப்பொருளான, அ வைக்கதிஷ்டான - மேற்கூறிய வியஷ்டிசமஷ்டியான சர்வத் திற்கும் இருப்பிடமான, பரிசுத்தபிரமமாய்நிற்க-நிஷ்குணபிரம் மாகாரமாயிருக்கவேண்டும், விரவுமாம்சாதி - கூடியமாம்சமுத லியவற்றை, பிரிதிவிதன்னில் - பிரிதிவிபாகத்திலும், மேவிரத் தாதிகள் சலத்தில் - இரத்தமுதலியவை சலத்திலும், திரமுறுதே யுசெறிதேயுவதனில் - பிரகாசமான அக்கினியை மகாக்கினியி லும், திகழ்வாயு மகாவாயுதன்னில் - பரிசிக்கும் வாயுவை மகா வாயுவிலும், உரவுடலாகாயம் மகாகாயத்து - இடமானதேகாகா யத்தை பூரணாகாயத்திலும், ஒன்றதாய்லயஞ்செயப்படுமே-அந்த ந்த காரணமாத்திரமாகக்கருதி இலயஞ்செய்யவேண்டும்—எ-று. (௪)

(௩-ம்) வெளிப்படை.

(அ-கை.) முன் தொகுத்துக்கூறியதை வகுத்துக்கூறுகின்றது.

கிராணமுதலா மிந்தியங்கள் கிடைத்தவதிதேவ
தைகளுக்கு, பராவுமுபாதி யாஞ்சூக்கும பராதியவைம்
பூதத்தில், விராவுலயமாம் படிபுரிந்து மேவுசீவ னனுப
வத்துக், கிராநின்றுளசத் தாதிகளை யிலயந்திக்கா தியி
ற்புரிக.

இ-ள். கிராணமுதலாமிந்தியங்கள்-கிராணமுதலிய இந்திரி
யங்களை, கிடைத்தவதிதேவதைகளுக்கு - அவற்றின் காரணமாயி
ருக்கும் அதிதேவர்களுக்கு, பராவுமுபாதியாம் - கிரமவுபாதியா
ன, சூக்குமபராதிய வைம்பூதத்தில் - சூக்குமப்பிரிதிவி முதலிய
பூதங்களில், விராவுலயமாம்படிபுரிந்து - வரிசையாகலயஞ்செய்
து, மேவுசீவனனுபவத்துக்கு - பொருந்தியசீவனுக் கனுபவமாக,
இராநின்றுள சத்தாதிகளை - இருக்கின்ற சத்தாதிவிஷயங்களை,
இலயந்திக்காதியிற்புரிக, திக்குமுதலிய தேவர்களிடத்திலும்லய
ஞ்செய்யவேண்டும்—எ-று. (ரு)

(அ-கை.) அங்ஙனம் லயஞ்செய்யுமுறையைப் பிரித்துக்கூ
றுகின்றார்.

தன்னது சுரோத்ரேந் திசையினுந் துவக்கு சார்
வாயு சட்சிர வியின்றன், மன்னுறு பிம்பம் இஃகுவை
வருணன் மருவுமாக் ராணமஃவனியின், பன்னுறும்வா
க்கு வக்கினி யிடத்தும் பாணியை யிந்திர னிடத்தும்,
துன்னுறு பாத மரிபாயு மித்ரன் றுகளில்கா சிபனிடத்
துபத்தம்.

இ-ள். தன்னதுசுரோத்ரம் - தனதுசுரோத்ரேந்திரியத்தை,
திசையினும் - திக்குகளிலும், துவக்குசார்வாயு - பரிசேந்திரியத்

தை வாயுவினிடத்திலும், சட்சிரவியின்றன் மன்னுறுபிம்பம் - நேத்திரேந்திரியத்தை சூரியபிம்பத்திலும்; இஃங்குவைவருணன் - நாக்கிந்திரியத்தை வருணனிடத்திலும், மருவுமாக்ராணமஸ்வனி யில் - பொருந்திய ஆக்ராணேந்திரியத்தை அஸ்வனியிடத்திலும், பன்னுறும்வாக்கு வக்கினியிடத்தும் - சொல்லப்பட்ட வாக்கே ந்திரியத்தைஅக்கினியிடத்தும், பாணியையிந்திரனிடத்தும் - பாணி இந்திரியத்தை இந்திரனிடத்திலும், துன்னுறுபாதமரி-நடக் கும்பாத இந்திரியத்தை விஷ்ணுவினிடத்திலும், பாயுமித்ரன் - குத இந்திரியத்தை சூரியனிடத்திலும், துகளில்காசிபனிடத் துபத்தம் - குற்றமற்ற காசிபனிடத்தில் உபத்தஇந்திரியத்தையு ம்(இலயஞ்செய்யவேண்டும்)—எ-று. (நா-ம்.) ஞானேந்திரியம் கன்மேந்திரியங்கள் லயஞ்செய்முறைகூறியது. (சு)

இதுவுமது.

மனமது சந்திர னிடத்தினும் புந்தி மறைபுகல் சதுமுக னிடத்தும், கனவகங் கார முருத்திர னிடத்துங் கவின்சித்த மச்சுத னிடத்தும், இனமுற லயஞ் செய்திடுக மற்றிவைகட் கிறைவரா யிருந்தவித் தேவர், முனமுள பெயரோ டிந்தியமென்ன முயலுமென் றருமறை புகலும்.

இ-ள். மனமதுசந்திரனிடத்திலும்-நாற்கரணத்துள்மனதை சந்திரனிடத்திலும், புந்திமறைபுகல் சதுமுகனிடத்தும் - புத்தியைவேதமோதும் பிரமனிடத்திலும், கனவகங்கார முருத்திரனி டத்தும் - அகங்காரத்தை உருத்திரனிடத்திலும், கவின்சித்தம ச்சுதனிடத்தும் - நல்லசித்தத்தை அச்சுதனிடத்திலும், இனமு றலயஞ்செய்திடுக - முறையாக இலயஞ்செய்யக்கடவாய், மற்றி

வைகட் கிறைவராயிருந்த வித்தேவர் - மேலிவற்றிக்கு இறை வராகவிருந்த தேவர்கள், முனமுளபெயரோ டிந்தியமென்ன - மூன்னந் தங்களுக்குள்ள பெயரோடு இந்திரியமாக; மூயனுமெ ன்றருமறை புகலும்-தொழிற்படுமென்று அரியவேதங்கூறுகின் றன—எ-று. (தா-ம்.) அந்தக்கரணங்கள் லயஞ்செய்முறைகூறி தேவர்களே அவ்வவ்விந்திரியங்களாய் விவகரிக்கிறார்களென் றுணர்த்தியது. (எ)

(அ-கை.) தேவர்களே இந்திரியாதிகளாய் விவகரிக்கிறார்க ளென்பது சுருதியுக்தமென்றுகூறி முடிவில் விராட்புருடாகார மாய் தியானிக்கக் கூறுகின்றார்.

தேவர்க டாமே யிந்திய மென்னத் திகழ்தர விவக ரிப்பவரொன், றோவரு மறைவாக் கியப்பிரமாண மோர்ந் துணாத் தனமலாற் சுவயமே, மேவுமுத் தியினுற் கற்ப னை யன்று விளம்பவை முறைலயஞ் செய்து, பாவனை முடியில் விராட்புரு டாகா ரம்பயில் சிந்தனை புரிக.

இ-ள். தேவர்கடாமேயிந்தியமென்ன - தேவர்களே இந் திரியமென்னும் பெயருடன், திகழ்தரவிவகரிப்பவரொன்று - வி ளங்கவிவகாரஞ்செய்வார்களென்று, ஓவருமறைவாக்கியப்பிர மாணம் - நிறைந்தவேதவாக்கிய நிச்சயத்தை, ஓர்ந்துணாந்தன மலால் - அறிந்து உணாத்தோமேயல்லது, சுவயமே மேவுமுத் தியினுல் - சுவேச்சாயுத்தியினுல், கற்பனையன்று - கற்பித்துக்கூ றியதல்ல, விளம்பவைமுறை லயஞ்செய்து-மேற்கூறியவாறே லயஞ்செய்து, பாவனைமுடிவில்-தியானநிறையில், விராட்புருடா காரம்பயில் சிந்தனைபுரிக - விராட்சுவரூபனுயிருக்கிறேனென் று தியானஞ்செய்க வேண்டும்—எ-று. (அ)

(அ-கை.) மேல் இரண்யகற்பம் அவ்வியாகிருதமா யிருத்த லை விவகரிக்குமுன் பிரசங்கசங்கதியாகச் சொல்லவேண்டி பிரமவித்தையை விரும்பினவர் முதல் உபாசிக்கத்தக்கதாயும் பிரமாண்டமே வடிவான விராட்புருடனிருதயகமலத்தில் அர்த்தபாகம் எப்போதும்பெற்றிருக்கின்ற மாயையோடுகலந்து சகலசகத்திற்கும் அபின்னநிமித்தோபாதான காரணமாகிய பிரம்மமே அர்த்தநாரீசமூர்த்தமாய் சர்வகாரணமா யிருக்கிறதென்கின்றார்.

அருத்தநாரீச வடிவமாம் பிரபுவே யகிலமார்பிராணிக டமக்கு, கருத்தவா தார காரண மென்னக் கருது தாய் தந்தையா தலினால், திருத்தமாப்படைத்த சகந்தேவர் மனிதர் திரளுயி ருணவினை யருந்த, பொருத்தமா மழையா திகளினாற் காத்துப் புகலெக்ய மூர்த்தியா யிருப்பார்.

இ-ள். அருத்தநாரீச வடிவமாம் பிரபுவே - அர்த்தநாரீஸ்வரவடிவமான பிரபுதானே, அகிலமார் பிராணிகடமக்கு - சகலசீவர்களுக்கும், கருத்தவாதாரகாரணமென்ன - கர்த்தாவாயும் ஆதாரமாயும் காரணராயும், கருதுதாய்தந்தையாதலினால்-எண்ணப்பட்டதாய்தந்தையாயிருத்தலால்,திருத்தமாப்படைத்த-திருத்தமாகச்சிருட்டித்த, சகந்தேவர்மனிதர் திரளுயிருணவினையருந்த-சகந்தேவர் மனிதர் முதலான சீவகோடிகள் புசிக்கும்படி, பொருத்தமாமழையாதி களினாற்காத்து-தகுதியான மழைமுதலியவையால் இரட்சித்து, புகலெக்கிய மூர்த்தியாயிருப்பார்- பிரமாண்டத்தில் எக்கியமூர்த்தியாய்த்துதிபெற்றிருக்கின்றார் எ-று. (ப-ம்.) எக்கியமூர்த்தி - உலகுநாடிய தபோபலமளிப்பவர். (கூ)

(அ-கை.) பிரகிர்தமான லயக்கிரமத்தைச் சொல்லவேண்டி பிரம்மாண்டத்தி னுவரணங்களைக் கூறுகின்றார்.

அண்டமா னதற்குப் புறம்புள பிரதிவி யதிகமா மிரண்டுபங்கதற்குக்,கண்டநீ ரிரண்டா மனலதற்கிரண்டு காலதற் கிரண்டதா காயம், மண்டதற் கிரண்டு பங்கதாய் விரிந்து வளர்ந்திடும் வரிசையாய் மேலும், விண்டதோர் வியஸ்த சமஸ்தவியா பகத்தால் மேதினி சூழ்ந்திடப் படுமே.

இ-ள். அண்டமானதற்கு - அண்டகோளத்திற்கு, புறம்புளபிரதிவி - புறம்பிலுள்ள பிரதிவிபூதம், அதிகமாமிரண்டுபங்கு- இரண்டுபங்குஅதிகமாகும், அதற்குக்கண்ட நீரிரண்டு-அதற்குமேல் சலபூதம் இரண்டுபங்குஅதிகமாகும், அனலதற்கிரண்டு-அதற்குமேல் அக்கினிபூதம்இரண்டுபங்கு அதிகமாகும், காலதற்கிரண்டது - அதற்குமேல் வாயுபூதம் இரண்டுபங்கு அதிகமாகும், ஆகாயமண்டதற் கிரண்டுபங்கதாய்விரிந்து - அதற்குமேல் ஆகாயபூதம் இரண்டுபங்கு அதிகமாகவும் வியாபித்து, வளர்ந்திடும் வரிசையாய் - முறையே விர்த்தியடையும், மேலும் விண்டதோர் வியஸ்த சமஸ்தவியாபகத்தால் - மேலும் சொல்லப்பட்ட பஞ்சீகரணஞ்செய்யப்படாமலும் பஞ்சீகரணஞ்செய்யப்பட்டு மிருக்கிற ஆவரணத்தினுல், மேதினிசூழ்ந்திடப்படுமே - சகமானது சூழப்பட்டும் இருக்கின்றது-எ-று. (தா-ம்.) அண்டமானது ஒன்றுக்கொன்று பத்துபங்கு ஆவரணங்களினுல் வியாபித்திருக்கின்றதென்று புராணங்களிற் கூறப்பட்டிருக்க, இங்குஇரண்டிரண்டுபங்கதிகமென்றதெவ்வாறென்னில்; இரண்டுபங்கை நாற்புறமுஞ்சூழ்ந்துவந்தால் பத்துபங்காகும், எவ்வாறென்னில்-ஐந்துகுரோசத்தைப் பிரதக்ஷணமாகவந்தால் ஐயைந் திருபத்தைந்து

குரோசமாகும், அதுபோல ஒன்று ஐந்தானால் இரண்டுபத்தாமெ ன்றறிக. அல்லது அங்கு பஞ்சீகரணஞ்செய்யப்படாத ஆவரண மென்றும் இங்கு செய்யப்பட்டதென்றுங் கருத்தாதலாலும் வி ரோதமில்லை. (௧௦)

(அ-கை.) வியாப்பியத்தை வியாபகத்தில்இலயப்படுத்தவே ண்டுமென்கிறார்.

ஆதலாற் பூமி சலத்தினுஞ் சலந்தா னனலினும னல்வாயு தனிலும், ஓதிய வாயு விண்ணிலும் விண்டா னுற்பவ மூலமாந் தூல, பேதமார் சகல பிரபஞ்சகார ணமாப் பேசிய மகாகாய மென்னும், ஏதமி லிரண்ய க ர்ப்பவியோ மத்து மியைதர லயமது புரிக.

இ-ள். ஆதலால் பூமிசலத்தினும் - பிரதிவியை அப்புவிலு ம், சலந்தானனலினும் - அப்புவை தேயுவிலும், அனல்வாயுத னிலும் - தேயுவை வாயுவிலும், ஓதிய வாயுவிண்ணிலும் - கூறி யவாயுவை ஆகாயத்திலும், விண்டான் - அவ்வாகாயத்தை, உற் பவமூலமாம் - சிருட்டிக்கேதுவாய்நின்று, தூலபேதமார் சகல பிரப்ஞ்சகாரணமா - நானுவகையான தூலப்பிரப்ஞ்சகாரணமா க, பேசியமகாகாயமென்னும் - கூறப்பட்ட மகாகாயமான, ஏத மிலிரண்ய கர்ப்பவியோமத்தும் - குற்றமற்ற இரண்யகற்பாகா யத்திலும், இயைதரலயமதுபுரிக - பொருந்த இலயஞ்செய்து மேலும்—எ-று. (௧௧)

இதுவுமது.

அந்தமா மகதா காயத்தில் யோகி யமலலிங் கத்த னு மாத்ர, வந்தனைக் கணப்போ திருந்திட வதுதான் வாசனை சூக்குமபூதம், மூந்துறு கன்ம மவித்தைஞா

னேந்திய முறயரு கன்மவிந் திரியம், பந்தமா மனது பு
ந்தியென் றுரைப்ப பகரும்லிங் காத்மக பாவம்.

இ-ள். அந்தமாமகதாகாயத்தில் - அப்பெரியமகதாகாயத்தி
ல், யோகியமலலிங்கத்தனுமாத்ரவந்தனுய் - யோகியானவன் இ
லிங்கசரீரமாத்திரமுடையவனுக, கணப்போதிருந்திட - ஒருக்ஷ
ணகாலமேனும் இருக்கவேண்டும், அதுதான் - அந்தலிங்கசரீ
ரமாவது, வாசனை - சகவாசனை, சூக்குமபூதம் - சூட்சுமபூதங்கள்,
மூந்துறுகன்மம் - முன்னுள்ளகருமம், அவித்தை - அஞ்ஞானம்,
ஞானேந்தியம் - ஞானேந்திரியங்கள், முயறருகன்மவிந்திரியம் -
தொழிற்படுகின்றகன்மேந்திரியங்கள், பந்தமாமனதுபுந்தியென்
றுரைப்ப - மனம் புத்தி இவைகளென்றுங்கூறப்படும், பகரும்
லிங்காத்மகபாவம்-முற்கூறியலிங்கசரீரத்தன்மை— எ-று. (கஉ)

இதுவுமது.

அம்முறை தூல வுபாதியை லயஞ்செய் தர்த்தமா
சித்திபெற் றவன்போல், இம்மையிப் பிரமாண்ட ப்புற
ந் தவனு யிருந்திந்தச் சூக்கும பூதச், செம்மையாஞ் சம
ஷ்டி லிங்கதே கத்தில் செறிந்ததிஷ் டித்தவனை, மும்
மையு முணரு மிரணிய கருப்ப முதல்வனுய் நின்றமை
நினைக.

இ-ள். அம்முறை - முற்கூறியபிரகாரம், தூலவுபாதியைல
யஞ்செய்து - தூலவுபாதியை விராட்டு சுவரூபத்தில் லயஞ்
செய்து, அர்த்தமாசித்திபெற்றவன்போல் - அணிமாசி சித்தி
பெற்றவன்போலாய், இம்மையிப்பிரமாண்டப் புறந்தவனுய் -
இப்போது இந்தப்பிரமாண்ட அபிமானம்விட்டு வெளிப்பட்ட
வனுக, இருந்து - நின்று, இந்த சூக்குமபூதச்செம்மையாஞ் சம

ட்டிலிங்கதேகத்தில் செறிந்ததிஷ்டித்தவனுன - பொருந்தி அத
ற்கதிஷ்டிதாவான், மும்மையுமுணரும் - திரிகாலமுமுணருகின்
ற, இரணியகருப்ப முதல்வனுய்நின்றமைநினைக - இரணியகரு
ப்பசுவரூபனுய் இருக்கின்றேனென்று சிந்திக்கவேண்டும்-எ-று.

(அ-கை.) தாமரையிற்ருேன்றிய நான்முகப்பிரமனன்ருே இரணியகருப்பன் சூக்குமபூத சமஷ்டி எவ்வாறுமென்ற வினுக்குத்தரம்.

சூக்குமபூத சமட்டியி னபிமா னந்தொட ரிரணிய கருப்பன், நீக்கமி லண்டப் பரப்பினையொடுக்க நினைக்குமுன் றனதயிஸ்வரிய, போக்கியநிமித்தந் தாமரைப்போதிற் பொலிதர நான்முகம் புடைத்தான், ஊக்கமெஞ்ஞானியிதிற்பேத நோக்க மொழித்தது தானென நினைக

இ-ள். சூக்குமபூதசமட்டியின் - சூக்குமபூதசமஷ்டியினது, அபிமானந்தொடரிரணியகருப்பன் - அபிமானம் பொருந்திய இரணியகருப்பனே, நீக்கமிலண்டப் பரப்பினையொடுக்க நினைக்குமுன்-வேறுபடாதஅண்டவிரிவை லயப்படுத்தநினைக்குமுன்னர், தனதயிஸ்வரிய போக்கியநிமித்தம்-தனது அண்டத்தின் அயிஸ்வரியத்தை யனுபவிக்குநிமித்தம், தாமரைப்பூவிற் பொலிதரநான்முகம்படைத்தான் - பத்மாசனத்தில் விளங்கி சிருட்டிக்க நான்குமுகங்கள்பெற்ருர் ஆதலால், ஊக்கமெஞ்ஞானி - ஞானவான்திடமாக, இதிற்பேதநோக்கமொழித்து - இதுதனக்கு வேறென்னும் கருத்தைவிட்டு, அதுதானெனநினைக - அச்சமட்டிலிங்க சரீரம் தானென்று நினைக்கக்கடவன் — எ-று. (தா-ம்.) பூத சூக்கும சமஷ்டி அபிமானியே இரண்யகருப்பனென்று கருத்து. (கஎ)

(அ-கை.) இங்ஙனம் இரணியகருப்பனைச் சிந்தித்த பின் மேற்செய்காரியங் கூறுகின்றார்.

இவ்வகை சமஷ்டி லிங்கதேகத்தை யியல்புற மிகு சூக்கமாய, அவ்வியா கிருத மாயாம்சந் தனிலு மதிசூக் க வவ்வியக்த சித்தில், செவ்விய சிதாபா சனும்பிரிவா கத் திகழ்தர லயமது புரிக, எவ்வமி லிதனைப் பன்மதத் தவரு மென்றநா மத்தின லிசைப்பார்.

இ-ள். இவ்வகைசமஷ்டிலிங்கதேகத்தை - இவ்வாறான சமட்டிசூக்குமதேகத்தை, இயல்புறமிகுசூக்கமாய் - பஞ்சீகரணஞ் செய்யப்பட்டாத சூக்குமபூதங்களைவிட (இயல்பாக மிகுசூக்குமமாயிருக்கும்), அவ்வியாகிருதமாயாம்சந்தனிலும் - உபாதிரூபமாக ப்பகுக்கப்படாதமாயாம்சத்திலும், அதிசூக்கவவ்வியக்தசித்தில் - அதிசூட்சுமமாகப்பகுக்கப்படாத வுபாதிரசிதமான சித்திலும், செவ்வியசிதாபாசனும்பிரிவாக - நல்லசிதாபாசனையும் வெவ்வேறாக, திகழ்தாலயமதுபுரிக - சேரும்படி லயஞ்செய்யக்கடவாய், எவ்வமிலிதனை - குற்றமற இந்த வவ்வியாகிருதத்தை, பன்மதத்தவரும் - பலமதஸ்தர்களும், என்றநாமத்தினலிசைப்பார் - தங்கட்கிசைந்த பெயரை கூறுவார்கள்—எ-று. (தா-ம்.) சடாம்சத்தை சட்த்திலும் சிதப்பாசாம்சத்தை சித்திலும் லயப்படுத்தவேண்டுமென்று தெரியப் பிரித்துக் கூறியது. (கரு)

(அ-கை.) இந்த அவ்வியாகிருத ஸ்தானத்தைப் பிராந்தியால் பலவாதிகள் பலவாறு கூறுகின்றனென்கிறார்.

எவ்விடந் தன்னிற் சகநாமரூப விருபேத மறவொன்றி நிற்கும், அவ்விடந் தன்னைச் சாங்கியர் முதலோ ரறிதரப் பிரகிர்தியென் றுரைப்பர், செவ்விய வேதாந்

திகள்மாயை யென்பர் திகழணு வென்பர் தார்க்கிகர், ஒ வ்வுருப் பவுத்த ரவித்தையென் றுரைப்ப ரோர்ந்திடவ் வியாகிர்த மொன்றே.

இ-ள். எவ்விடந்தன்னிற்சகம் - எந்தவிடத்தில் சகமா னது, நாமரூபவிருபேதமாவொன்றிநிற்கும் - நாமம் ரூபம் என் னுமிருபேதமின்றி யிருக்கின்றதோ, அவ்விடந்தன்னை-அந்தஸ் தானத்தை, சாங்கியர் முதலோர் - சாங்கியமதஸ்தர்முதலானோ ர், அறிதரப்பிரகிரதியென்றுரைப்பர் - அறியத்தக்கதாய் பிரகிர் தியென்றுகூறுவார்கள், செவ்வியவேதாந்திகள்மாயையென்பர்- நல்லவேதாந்திகள் மாயையென்பார்கள், திகழணுவென்பர்தார் க்கிகர் - தார்க்கிகர்தோன்று மணுவென்பார்கள், ஒவ்வுருப்பவு த்தரவித்தையென்றுரைப்பர் - ஒருமையின்றிய பவுத்தமதஸ்தா ள் அவித்தையென்று கூறுவார்கள், ஓர்ந்திடவ் வியாகிருதமொ ன்றே - ஆதலின் அந்த அவ்வியாகிருதமொன்றென் றறியக்கட வாய்—எ-று. (கசு)

(அ-கை.) அவ்வியாகிருதத்தில் சகலமும் லயமடைந்திருந் து சிருட்டியிற்றோன்றும்வகை கூறுகின்றார்.

அனையதோ ரவ்வியா கிருதத்திற் சர்வ மமைதரு லயமுற வுருவம், நினைதரத் தோன்று ததன்சத்தை யா லே நிகழ்தரு மெங்ஙன மென்னில், புனைதரு மவைசம் பந்தமொன் றின்றிப் பொருந்துசித் தருந்துத லின்றி, வி னைதரு சிருட்டி காலமட் டிருந்து விளையுமவ் வியக்த்த த்தி னின்றே.

இ-ள். அனையதோ ரவ்வியா கிருதத்தில் - அந்த அவ்வியா கிருதத்தில், சர்வமமைதருலயமுற-சகலபதார்த்தங்களும் லயம

டைந்து, உருவங்களை தரத்தோன்றுது - பாவிக்கின்றரூபந்தோன் றாமல், அதன் சத்தையாலேநிகழ்தரும் - அதனது சத்தையா லேயமைந்திருக்கின்றன, எங்ஙனமென்னில், எவ்வாறென்னி ல், புனை தருமவை - எடுத்துக்கூறியவைகள், சம்பந்தமொன்றி ன்றி - ஒன்றோடொன்று சம்பந்தமில்லாமலும், பொருந்து சி த்தருந்துதலின்றி - சித்துக்குப்போக் கியமாகாமலும், வினைத ருசிருட்டி காலமட்டிருந்து - மறுசிருட்டிகாலம்வரையிலிருந்து, வினையுமவ்வியக்தத்தினின்றே - அந்த அவ்வியாகிருதத்தி லிரு ந்து மறுசிருட்டியுண்டாகிறது—எ-று. (கஎ)

(அ-கை.) சிருட்டிக் கிரமமும் சம்மாரக்கிரமமும் கூறுகி ன்றார்.

சிருட்டி யாகாய முதலநுலோமத் திகழ்தரு கிரம மா யுண்டாம், வருத்து சங்காரம் பிருதிவி முதலா மா றியே பிரதிலோம மாகத், திருத்தமா யொடுங்குந் தோ ன்றிய நெறியே தெளிஞரோ பகுத்திட வல்லார், அருத்த மாமிதனை நிரந்தரவநுசந் தானமன்பொடு புரிந்திடவே.

இ-ள். சிருட்டியாகாயமுதல் - உற்பத்தியானது ஆகாயமு தலாக; அநுலோமத்திகழ்தருகிரமமாயுண்டாம் - அநுலோமக் கிரமமாயுண்டாகும், வருத்து சங்காரம் - வருந்துகின்ற ஒடுக்க மானது, பிருதிவிமுதலா - பிருதிவிமுதலாக, மாறியேபிரதிலோ மமாக - அதற்குமாறாய் பிரதிலோமக்கிரமமாக, திருத்தமாயொ டுங்குந் தோன்றியநெறியே - உற்பத்தியான முறைப்படி சரி யாய் லயப்படும், தெளிஞரோ பகுத்திடவல்லார் - இத்தோற்ற வொடுக்கங்களை தத்துவஞானிகளே பிரித்துணரத்தக்கது, அருத் தமாமிதனை-பொருளாயிருக்கின்றவிதனை, நிரந்தரவநுசந்தானம ன்பொடுபுரிந்திடவே-சதாவநுசந்தானஞ்செய்யவேண்டும்-எ-று.

(அ-கை.) அங்ஙனம் விராட்டு, இரண்யகற்பம், அவ்வியாகிருதமென்னு மூன்றுஸ்தானத்தையும்விட்டு பரமகாரணத்திலிருக்கவேண்டுமென்று முற்கூறியதை விரித்துக்கூறுகின்றார்.

ஆகியவிராட்டு விரணியகருப்ப னவ்வியா கிருதனு மூன்று, வாகிய தூல சூக்கும மூல மருவுறு சமஷ்டியாஞ் சகத்தும், மோகமா மவத்தை மூன்றொடும் விடுத்து மொழிந்திடு துரியமாய்நின்ற, சோகமில் பிரம பதமது கிடைக்கத் தொடர்பினிற் றியாணிக்க வேண்டும்.

இ-ள். ஆகியவிராட்டுவிரணியகருப்ப னவ்வியாகிருதனுமூன்று-முற்கூறிய விராட்டு இரணியகருப்பன் அவ்வியாகிருதனென்னுமூன்று, வாகியதூலசூக்கும மூலம் - புறத்திலுள்ளதூலம்சூக்குமம் காரணமுமாகிய, மருவுறுசமஷ்டியாஞ் சகத்தும் - சேர்ந்தசமஷ்டிசகத்தையும், மோகமாமவத்தை மூன்றொடும் விடுத்து - மயக்கமான சாக்கிரசொற்பன சுழுத்தியென்னு மூன்றவத்தையையும்விட்டு, மொழிந்திடு துரியமாய்நின்ற - நாலாவது துரியஸ்தானமாய்நின்ற, சோகமில்பிரமபதமது கிடைக்க - துன்பமில்லாத சர்வாதிஷ்டானமான பிரமபதசித்தியின்பொருட்டு தொடர்பினிற்றியானிக்கவேண்டும் - இடைவிடாது தியானஞ் செய்யவேண்டும்—எ-று. (கக)

இதுவுமது.

அம்மகா தியானந்தன்னு லடைதருஞ் சாக்ஷாத்காரம், செம்மையாம் விருத்திதன்னாற் றியானகாரண கர்த்தாவாம், இம்மையா ரிலிங்கமூ லாக்கியானத்தை யிகந்து நீக்கி, தம்மூயர் பரத்தையொன்றச் சால்கெட வானென்றும்போல்.

இ-ள். அம்மகாதியானந்தன்னால் - அந்தமகத்தான தியான பலத்தினால், அடைதருஞ்சாக்ஷாத்காரம் - சாக்ஷாத்காரமான சுவாநுபவமுண்டாகும், செம்மையாம் விருத்திதன்னால் - அந்தசுத்தவிருத்தியினால், தியானகாரணகர்த்தாவாம் - தியானத்திற்குக் காரணமாயும் - கர்த்தாவாயுமிருக்கின்ற, இம்மையாரிலிங்கம் - இங்ஙனமுள்ள லிங்கதேகத்தையும், மூலாக்கியானத்தை - மூலாஞ்ஞானத்தையும், இகந்துநீக்கி - போக்கிலயஞ்செய்து, தம்முயர்பதத்தையொன்றசசால்கெடவானென்றும்போல்-கடமுடைந்தாலவ்வாக்யம் மகாகாயத்தைச்சேர்வதுபோல நானாகிய மேலான பிரமானந்தபதத்தையடையக் கடவாய்-எ-று.(நா-ம்.)

சுருதிவாக்கியம். மூன்று ஸ்தானத்தையும் விட்டென்னுமிடத்து உள்ளறிவுமல்ல வெளியறிவுமல்ல இவ்விரண்டிடத்திலறிவுமல்ல, அறிவுமல்ல அறிவின்மையுமல்ல அறிவேகனமாயுறைந்திருப்பதுமல்லவென்று சுருதியிற் காட்டப்பட்ட முறையே விட்டு சர்வாதிஷ்டானமாயும் முடிவாய் மிகுந்த சின்மாத்திர ஏகரசமாயும் திரிசியமல்லாமலும் விவகரிக்கக்கூடாமலும் கிரகிக்கக் கூடாமலும் இலக்கணமில்லாமலும் சிந்திக்கக்கூடாமலும் பெயருக்குட்படாமலும் ஏகாத்மஞான சாரமாயும் பிரபஞ்சத்தின் ஒழிவாயும் சிவமாயும் சாந்தமாயும் அத்வைதமாயும் இருப்பது நாலாவதுபதமாம். அதுசாக்ஷாத்தாககிடைக்கும் வரையில் தியானிக்கவேண்டுமென்றுகொள்க. இங்ஙனம் இலிங்கதேகத்தை லயப்படுத்தி துரியபதத்தைச் சேர்வதே லிங்கமாகிய விலங்கை விட்டு கிர்தார்த்தனாதலென்றுணர்க. (உ0)

(அ-கை.) உள்ளறிவுமல்ல வெளியறிவுமல்ல வென்பது முதலாகச் சொல்லிய சுருதியில் லிங்கதேகத்தைவிடச் சொல்லவில்லையே அதுவும் விடவேண்டுமென்றதேதனென்று சங்கிந்து ஸ்தூலசூக்ஷுமபூதம் இந்திரியங்களிலேயே லிங்கதேகம் நிலைபெ

ற்றிருப்பதால் மூன்றுஸ்தானத்தையும் விடும்போதே லிங்கதே கத்தைவிடுவதும் தானேசித்தமாகுமென்று காட்டுகின்றார்.

பூத மிந்திரிய மனந் தெளிபுந்தி புணர்கன்மம் வா சனை வாயு, பேதவஞ்ஞான மிவை லிங்கதேகப் பெற்றி யஞ்ஞான மேதென்னில், ஏதமில் பிரம மவித்தையைக் கூடி யியலவ்வியா கிருதமாம் போதில், ஓதியசூக்க பூ தநின் றிலிங்க முற்பவ மாகுமென் றுணர்வாய்.

இ-ள். பூதமிந்திரியமனந் தெளிபுந்தி-பூதங்கள் இந்திரியங் கள் மனம் புத்தி இவைகளும், புணர்கன்மம்வாசனைவாயு-பொ ருந்தியகர்மம் வாசனை வாயு இவைகளும், பேதவஞ்ஞானம் - பேதமானவஞ்ஞானமும், இவைலிங்கதேகப்பெற்றி - இவை யே லிங்கசரீரநிலையாகும், அஞ்ஞானமேதென்னில் - அஞ்ஞா னமெங்ஙன நிலையாமென்றால், ஏதமில்பிரமம் - களங்கமற்ற பி ரமமானது, அவித்தையைக்கூடி - அஞ்ஞானவரணத்தினால்,இ யலவ்வியாகிருதமாம்போது-இசைந் தவ்வியாகிருதமாயிருக்கும் போதே, ஓதியசூக்கபூதநின்று - முற்கூறியசூக்கும பூதங்களின் வழியே, இலிங்கமுற்பவமாகுமென்றுணர்வாய் - இலிங்கசரீர முண்டானதென்றுணரக்கடவாய்—எ-று. (தா-ம்.) அஞ்ஞான மே இலிங்கசரீரத்திற்கு முதனிலையாகும், அதுநீங்கின் இலிங்க சரீரமழியுமென்பது கருத்து. (உக)

(அ-கை.) இவ்வாறு வான்மீகிமகாரிஷியால் பிரணவப் பொருளைவிளக்கு முபாயத்தினால் போதிக்கப்பட்ட பரத்வாஜர் ஞானவானாய் தமதனுபவத்தைக் குருவினதனுபவத்தோ டொ த்து பரிக்ஷைசெய்யும் பொருட்டு பிரகாசமாகச் சொல்லுகின் றார்,

நிகழு மிப்போ திலிங்க நிகளம் விட் டனைய சர்வ [னல்
இக முத்த னனை னெந்த வியைபெனிற் சிதாம்சந் தன்
தகுஞானு னந்தவாரி சார்ந்தன னபேத மாக
சகலமா முபாதி நீங்கும் தற்பரமாகி நின்றேன்.

இ-ள். நிகழுமிப்போது - விளக்கமான விப்போது, இலிங்கநிகளம்விட்டு - இலிங்கதேகமான விலங்கைவிட்டு, அனையசர்வ - அந்தச்சர்வப்பிரகாரத்தினுலும், இகமுத்தனனை - ஜீவன் முத்தனுனேன், எந்தவியைபெனில் - எவ்வாறென்னில், சிதாம்சந்தன்னல் - நான் சித்தினம்சமாக விருந்தவினுல், தகுஞானனந்தவாரி சார்ந்தனன் - மேலான ஞானனந்த சமுத்திரத்தை யடைந்தேன், அபேதமாக-பேதமின்மையால், சகலமாமுபாதிநீங்கும் - சகலவுபாதிகளு மற்றிருக்கின்ற, தற்பரமாகிநின்றேன் - பரமாத்மாவாக விருக்கிறேன்—எ-று. (உஉ)

(அ-கை.) ப்ரமாத்மாவாக விருக்குந்தன்மையை திருட்டாந்தத்துடன் கூறுகின்றார்.

மேலுங் கூடஸ்த்தமாக விளங்கு கேவலமா வியாபி, மூலமாஞ் சித்தாய் நின்றேன் முதிர்சத்தி பெற்றேனல்லன், சால் குட முடைந்தால் வானிற் சார்பேத மின்மை போல, தூலமார் ஜீவேஸாத்ம சொற்பேதஞ் சுருதி கூறு.

இ-ள். மேலுங் கூடஸ்தமாக - பின்னுங் கூடஸ்தமாகவும், விளங்குகேவலமாவியாபி - பிரகாசிக்கும் ஏகவஸ்துவாக வியாபித்திருக்கின்ற, மூலமாஞ் சித்தாய்நின்றேன் - காரணமான சித்தாகவே யிருக்கிறேன், முதிர்சத்திபெற்றேனல்லன் - சிற

சத்திவேருய்ப்பெற்றேனன்று, சால்குட்முடைந்தால் - சால்குட்முதலானவை யுடைந்தால், வானிற்காரபேதமின்மைபோல - அவ்வாகாயங்கள் மகாகாயத்தில் அபேதமாவதுபோல, தூலமார்சிவேஸாத்ம - தேகத்திற் பொருந்திய சீவாத்மாவென்றும் பரமாத்மாவென்றும், சொற்பேதம் - சொல்லுகின்ற வேற்றுமை, சுருதிகூரு - வேதங்களிற்சொல்லவில்லை (என்ருல் அவையேகமென்றே கூறுகின்றன)—எ-று.(தா-ம்.) ஒருகடத்திற்கே கடம் கலசமுதலான நாமபேதகற்பனையினுல் அவ்வுபாதியடைந்த ஆகாயத்திற்கும் கடாகாயம் கலசாகாயமுதலான நாமபேதகற்பனையுண்டாவதுபோல, ஓரஞ்ஞானத்திற்கே சகமென்னும் பல நாமபேதகற்பனையுண்டானதால் அந்த சகத்தாகிய வுபாதியுள்ள எனக்கும் சீவன் ஈஸ்வரன் தேவன் மனிதன் யானை என்பது முதலான நாமபேதகற்பனையுண்டாயிற்று. அந்த ஓர் கடமழிந்தால் இரண்டுபேதமுநீங்கி சுத்தாகாயமாவதுபோல ஓரஞ்ஞானம் நீங்கில் சகலநாமரூப பேதமுநீங்கி சித்தோடயிக்கமான ஐஸ்வரிய முண்டாமென்றுகருத்து. இங்ஙனம் சீவாத்ம பரமாத்துமாக்களுக்கு ஐக்கியங் கூறுஞ் சுருதிகளாவன: எங்கே வேருென்றைப் பார்க்கவும் கேட்கவும் அறியவுமில்லையோ அஃதே பூமா பிரம்மானந்தமாகும் எல்லாம் இவனது ஆத்மாவாக இருக்கும்போது எதனுல் எத்தைக்காண்பன் ஒரோ ஆத்மஞான சாரமாயும் சிவமாயும் சாந்தமாயும் அத்வைதமாயு மிருப்பது நாலாவது துரியப்தம் இவ்விடத்துப்பலவாக ஒன்றுமில்லையென்றும் சுருதிகள் ஐக்கங் கூறுகின்றனவென்றறிக. (உ௩)

(அ-கை.) சீவாத்மா பரமாத்மாவில் அபேதமாமென்பது சுருதிகள் கூறும் ஐக்கியம் திருஷ்டாந்தத்தாற் கூறுகின்ருர்.

திகழ்தரு மக்னிதன்னைச் சேர்ந்திடு மக்னி யொன்ருய்
நிகழ்தரு மபேதமாக நிறைந்த பேருருவத் தாலும்

மிகுந்திடு விசேட மின்றி மேவல்போற் சீவாத்மாவும்
தகும்பர மாத்துமாவிற் சார்ந்தொன்றி மகத்தாய்நிற்கும்

இ-ள். திகழ்தரு மக்னிதன்னை - விளங்குகின்ற நெருப்பில், சேர்ந்திடுமக்னியொன்றாய் - கூடிய நெருப்புமொன்றாக, நிகழ்தருமபேதமாக - பேதமின்றிவிளங்கும், (அதுவுமன்றி) நிறைந்தபேருருவத்தாலும் - பெயரினாலும் வடிவினாலும், மிகுந்திடு விசேடமின்றி- மேற்படுங் குணவிசேஷ மில்லாது, மேவல்போல - இருக்குந்தன்மைபோல, சீவாத்மாவும் - சீவாத்மாவானது, தகும்பரமாத்துமாவில் - தக்க பரமாத்துமாவில், சார்ந்தொன்றி மகத்தாய்நிற்கும் - ஒன்றாய்க்கூடி பூரணமா யிருக்கும்—எ-று.

(அ-கை.) மேலும் அசேதனப்பிரபஞ்சமும் சித்தில் லயப்படுத்துவதால் சேதனமா மென்பதற்குத் திருஷ்டாந்தங் கூறுகின்றார்.

உப்பளஞ் சேர்ந்த திரண மூப்பாகு மொருமை போற் சைதன்னியத் தொன்றும், இப்பிரபஞ்ச வசேதன மெல்லா மியைதரு சேதன மாகும், செப்புமக்கட்டி களாந்திடி லுப்பாஞ் செறிந்திடச் சமுத்திரந் தன்னில், அப்பதாய் நாம ரூப மின்றாம் போலற லமிழ் தவி யொன்றல் போலும்.

இ-ள். உப்பளஞ் சேர்ந்ததிரணம் - உப்பளத்திற் சேர்ந்ததிரணமுதலானவை, உப்பாகு மொருமை போல் - அதின் மடிந்து உப்பாகுந்தன்மைபோல, சைதன்னியத்தொன்றும் - சித்தில் லயப்படுத்தப்பட்ட, இப்பிரபஞ்சவ் சேதனமெல்லாம் - இந்தப்பிரபஞ்ச வசேதனங்களெல்லாம், இயைதரு சேதனமாகும் - கூடிச் சேதனங்களாகும், செப்புமக்கட்டி - அவ்வுப்புக்க

ட்டியானது, கரைந்திடிலுப்பாம் - உடைந்துகரைந்தால் உப்பென்று சொல்லப்படும், செறிந்திடச் சமுத்திரந்தன்னில் - கடலிற்சேர்ந்தால், அப்பதாய் நாமரூபமின்றும்போல் - அன்னீராகி நாமரூபமில்லாமற்போதல்போல, அறலமிழ் தவியொன்றல்போலும் - சலத்தில் சலமும் பாலில்பாலும் நெய்யில் நெய்யும் கூடுவதுபோல் ஏகசுவரூபமாகும்—எ-று. (உரு)

முனமிவை யெல்லாந் தம்மி னுட்கூடி மூதிர் சொரூபங் கெடாதாகி, பினமுறு பேத மாக் கொளற் கரிதாம் பெற்றிபோ லியானபேதமதாய், நினைவில் சேதனமாய் நித்தி யானந்த நிறைந் தெலாமறிந்து மேலாகி, கனந்தரு பரம காரண சத்திற் கவின்பெறப் பிரவேசமாய் நின்றேன்.

இ-ள். முனமிவையெல்லாம் - முற்கூறிய இவைகளெல்லாம், தம்மினுட்கூடி - தம்முட்சேர்ந்து, மூதிர் சொரூபங்கெடாதாகி - தமது சுவரூபநாசமில்லாமல், பினமுறுபேதமாக்கொளற்கரிதாம் - பிரிவுபட்டபேதமாமகக் கிரிகிக்கப்படாததான, பெற்றிபோல் - தன்மையைப்போல, இயானபேதமதாய் - நான் சர்வப்பிரகாரத்தினாலும் அபேதமாகவும், நினைவில்சேதனமாய் - சங்கற்பமற்ற சிதேகரசமாகவும், நித்தியானந்த நிறைந்து - சதானந்தபூரணமாக, எலாமறிந்து மேலாகி - சர்வமுமுணர்ந்து மேன்மையுடையதாகவும், கனந்தருப்ரமகாரணசத்தில் - மகத்தாகவுமிருக்கின்ற மூலமான சத்தாத்மாவில், கவின்பெறப்பிரவேசமாய்நின்றேன் - நன்றுப்பிரவேசித்திருக்கிறேன்—எ-று. (தா்-ம்.) சுவரூப நாசமில்லாம லென்றதினால் உபாதியழியும்போது உபாதிநீங்கிய சீவாத்மாவுக் கழிவில்லையென்றுகருத்து, (உசு)

(அ-கை.) சுருதியிற் கூறியபடி சுத்த குணங்களையுடைய பிரம்மானுபவத்தை விளக்குகின்றார்.

நித்தியமாய் வியாபகமாய்ச் சாந்தமாகி நிரஞ்சனமாய்க் குறைவற நிட்களம தாகி, சுத்தமதாய்ச் சலனமின்றி மேன்மையான தொல்பதமா மப்பிரம சொரூபமானேன், சித்தமுறத் தள்வதிது கொள்வதென்னுஞ்செறிபேத மறத்திகழுஞ் சத்யமாகி, இத்தகையிந் திரியமில்கே வலமாய்ச் சத்திய வியல்பான சங்கற்பப் பிரமமானேன்.

இ-ள். நித்தியமாய் - நித்தியமாகவும், வியாபகமாய் - வியாபகமாகியும், சாந்தமாகி - உபசாந்தமாகியும், நிரஞ்சனமாய்-குற்றமற்றதாயும், குறைவற நிட்களமதாகி - குறைவின்றி நிஷ்களமாகியும், சுத்தமதாய் - சுத்தமாகியும், சலனமின்றி மேன்மையான - அசைவற்றதாய் மேலானதாயிருக்கின்ற, தொல்பதமா மப்பிரமசொரூபமானேன் - அநாதியான அந்தப்பிரமசொரூபமானேன், சித்தமுறத்தள்வதிது கொள்வதென்னும்-சித்தம்பொருந்த இது தள்ளத்தக்கது இதுகொள்ளத்தக்கதென்கின்ற, செறிபேதமறத் திகழுஞ்சத்தியமாகி - பொருந்திய பேதமின்றி விளங்குஞ் சத்தியப் பொருளாகி, இத்தகை யிந்திரியமில் கேவலமாய் - இவ்வாறான இந்திரியப் பிரவிர்த்தியில்லாத தனிவஸ்துவாய், சத்தியவியல்பான சங்கற்பப்பிரமமானேன் - இயல்பான சத்திய சங்கர்பமுடைய பிரமமானேன்—எ-று. (கூஎ)

இதுவுமது.

புண்ணிய பாப மிரண்டு மின்றாகிப் புகல்சகத் பரமகா ரணமாய், எண்ணுமக் விதியப் பரஞ்சுடராகு மிற

ப்பி லானந்த மாம் பிரமம், நண்ணு மான்மாவா யிக்கு ண முளதாய் நவின்றிடு சத்துவ மாதி, திண்ணிய மாயா குணமிலா தெல்லாஞ் செறிந்திடு மெனச் சிந்தை செய் வேன்.

இ-ள். புண்ணியம் பாபமிரண்டு மின்றாகி - புண்ணியபா பமற்றதாயும், புகல்சகத்பரமகாரணமாய் - பிரபஞ்சத்திற்கு மே லானகாரணமாயும், எண்ணுமத்விதியப் பரஞ்சுடராகி-நிச்சயிக் கப்பட்ட அத்வைதமான பரஞ்சோதியாகியும், இறப்பிலானந்த மாம் பிரமம் - அழிவற்ற நித்தியானந்தமான பிரமமானது, நண் ணுமான்மாவாயிக்குண முளதாய் - பொருந்திய ஆத்மாவென் னப்பட்டு மேற்கூறிய குணவிசேஷமுடையதாய், நவின்றி டுசத்துவமாதி - சொல்லப்பட்ட சத்துவமுதலிய, திண்ணியமா யாகுணமிலாது - சத்துவம் ரஜசு தமசு வென்னுந் தூலமாயாகு ணங்களில்லாது, எல்லாஞ் செறிந்திடுமெனச்சிந்தை செய்வே ன் - எல்லாவற்றையும் பிரவேசித்திருக்குமென்று சதாத்தியான ஞ்செய்கின்றேன்—எ-று. (தா-ம்) அப்பியாசகாலத்திலும் இ தை இவ்வாறு தியானிக்க வேண்டுமென்று நீ ருபதேசித்தபடி தியானுநு சந்தானஞ்செய்கின்றேனென்றது. (ப-ம்.) எல்லாஞ் செறிந்திடு மென்றதனுல் பிரமமுழுமுதுந் தன்றுற்பிரவேசிக்க ப்பட்டிருக்கிறதென்றும் பொருள்கொள்க.	(உஅ)

(அ-கை.) இவ்வனுசந்தானத்துடன் சுத்தகர்மவிதி வழு வாது சாதகஞ்செய்து பிரமானந்தமடைய தக்கதென்கிறுர்.

கன்மவிதியை வழுவாது கருதி யிவ்வா றப்பியாசு ர், துன்னு புருடன் மனமந்தச் சொரூபந் தன்னி லயமா கும், மன்னு மாத்ம பிரகாச முண்டாய் மாயுந் துக்க

சமூகங்கள், சொன்ன வாத்ம சையோகச் சுகமூண்டா குமப்போது.

இ-ள். கன்மவிதியைவழுவாது - தான்செய்யவேண்டியசத்கர்மமார்க்கம்விடாமல், கருதியிவ்வாறப்பியாசம் - அறிந்து இந்தப்பிரகாரம் பழகுதலே, துன்னு புருடன்மனம் - பொருந்திய புருஷனது மனமானது, அந்தச் சொரூபந்தன்னி லயமாகும் - அந்தப் பிரமத்திலய மடையும், மன்னுமாத்மப் பிரகாசமூண்டாய் - நிலைபெற்ற ஆத்மானுபவமுண்டாகி, மாயுந்துக்கசமூகங்கள் - சகலதுக்கமு நிவர்த்தியாம், சொன்ன வாத்மசையோக - முற்கூறிய ஆத்மசையோகமாகிய, சுகமூண்டாகு மப்போது - சதானந்தமுண்டாகும்—எ-று. (உக)

இதுவுமது.

தன்றூற்சுவயமே யானந்த சத்தியான்மாவைத்தானடைவன், பன்னு மெவ்வாறெனி லெனினும் பரமாஞானந்த மயம், துன்னும் பிரபு வேறிலை யானேதுகளில் பிரம சொரூபமென, மன்னுஞ் சுவாநுபவ முள்ளே வயங்கக் குளிர்ந்து மகிழ்தருமே.

இ-ள். தன்றூற்சுவயமே - தானேதன்றேல், ஆனந்தசத்தியான் மாவைத்தானடைவன் - ஆனந்தமயமான சத்தியாத்மபதந் தானடைவான், பன்னுமெவ்வாறெனில் - அஃதெங்ஙனங் கூறுவதென்னில், எனினும் பரமாஞானந்தமயம் - என்னைவிட் பிரம்மக்ஞான ஆனந்தாம்சம், துன்னும் பிரபுவேறிலை - பொருந்தியபிரபுவேறில்லை, யானேதுகளில்பிரமசொரூபமென - யானேபிரம்மசொரூபமென்று, மன்னுஞ் சுவாநுபவம் - நிலைபெற்ற சுவாநுபவம், உள்ளேவயங்கக்குளிர்ந்து மகிழ்தருமே - உள்ளத்தில் விளங்கும்படி வுபசாந்தமாய்சுகிப்பன்—எ-று.(தா-ம்.)

ஆத்மசையோகமென்பது சாட்சாத்கார மாதலென்று கருத்து.

(அ-கை.) இங்ஙனம் பரத்துவாஜர்கூறிய அநுபவத்தைக் கேட்டு வான்மீகமகாருஷி சந்தோஷமடைந்து அவ்வநுபவம் நிலைநிற்கும்பொருட்டு விட்டே அதையறியவேண்டும், விட்டவனுக்கே அந்தமேலான ஞானப்பதங்கிடைக்கும் என்னுஞ்சுருதியிற்கூறிய விதிமையாகிய சன்னியாசத்தை அவசியஞ்செய்ய வேண்டுமென் றுபதேசிக்கின்றார்.

நண்பவிச் சமுசா ரச்சுழ லதனி னலிதருகின்ற நீ
சமமாம், எண்டகு விஸ்ராந் திச்சுகங்கிரகத் திருந்தடை
தற் கரிதாகில், மண்டிய கருமமியாவையும் விடுத்து மா
த்தியாகி யாகியே மேலாய், விண்டவப்பிரம பதத்தில்
விக்ஷேபம் விளிதர விருப்பொடு மிருத்தி.

இ-ள். நண்ப? - ஓ சிநேகிதா, இச்சமுசாரச்சுழலதனில் - இந்தச்சமுசாரமாகிய சக்கரத்தில்; நலிதருகின்றநீ - துன்புறுகின்ற நீ, சமமாமெண்டகுவிஸ்ராந்திச்சுகம்-சமரசமாக வெண்ணப்பட்ட ஒழிவுசுகத்தை, கிரகத்திருந்தடைதற்கரிதாகில்-இல்லறத்திலிருந்து பெறுதற்கருமையாயிருந்தால், மண்டியகருமமியாவையும் விடுத்து - மிகுந்தகன்மங்க ளெல்லாவற்றையும் விட்டு, மாத்தியாகியாகியே - சர்வபரித்தியாகியாயிருந்து, மேலாய்விண்டவப்பிரமபதத்தில்-மேன்மையாகக்கூறிய அந்தப்பிரம்மபதத்தில், விக்ஷேபம்விளிதர - சகபாவனைநீங்க, விருப்பொடிருத்தி-பிரியமாயிருக்கக்கடவாய்—எ-று. (தா-ம்.) பிரமநிஷ்டனே அமிர்தமாந்தன்மையைப் பொருந்துகிறானென்னுஞ் சுருதிப்படி வேறுவியாபாரமின்றி பிரமத்திலிருப்புற்ற சன்னியாசிக்கேமூலாக்ஞானத்தோடு பிராந்தியழியுமாகையால் கருமங்களைவிட்டுபிரமத்தினிடமாய் விருப்புற்றிருக்கவேண்டுமென்றுகருத்து. வியாபாரம்-பிரவிர்த்திவிவகாரம், (௬௧)

(அ-கை.) இங்ஙனங்கூறிய வான்மீகிமுனிவரது உபதேசத்தைக்கேட்டுப் பரத்துவாஜர் சொல்லுகின்றார்.

அருள்புரி குருவே நீரொமக்கன்பா லளித்திடு மிந்தமாஞானம், தெருளுற முற்று முணர்ந்தனன் புந்திதெளிதர நின்மலமான, மருளுறு மிச்சமுசாரம் விடப்படலால் வளர்தரா கெடிஇனிமாயும், பொருவரு பிரம சம்பன்ன னானேன் புரையறு முத்தனு மானேன்.

இ-ள். அருள்புரிகுருவே - கிருபையுடைய குருமூர்த்தியே, நீரொமக்கன்பால் - நீரெம்மிடத்தன்புவைத்து, அளித்திடுமிந்தமாஞானம் - அனுக்கிரகஞ்செய்த இந்தஞானத்தை, தெருளுறமுற்றுமுணர்ந்தனன் - சந்தேகந்தீரமுழுது மறிந்துக்கொண்டேன், புந்திதெளிதர நின்மலமான - புத்திதெளிந்து சுத்தமாயிற்று, மருளுறுமிச்சமுசாரம் விடப்படலால் - மயக்கமான இந்தச்சமுசாரம் நீங்கிவிட்டதால், வளர்தராகெடிஇனிமாயும் - இனிவிருத்தியடையாமல் ஒழிந்துபோம், பொருவருபிரம சம்பன்னனானேன் - ஒப்பற்றபிரமசம்பத்துடையவனானேன், புரையறுமுத்தனுமானேன் - களங்கமற்றசீவன் முத்தனுமானேன்—எ-று. (தா-ம்.) சமுசாரத்தை அறிந்துவிட்டவுடன் பிரமசம்பன்னனாவனென்று சுருதியிற்கூறுதலால் அறிந்துவிட்டபின் எனக்குச் சமுசாரமில்லையென்று கருத்து. (ப-ம்.) சம்சாரம் கிரியசத்தியபுத்தி.

இருவுமது.

ஞானியாஞ் சீவன்முத்த னய்ந்துசெய் கருமமியாது
மேனயந் தியற்றவேண்டும் விடுத்திட வேண்டுமேயோ
மானமார் பிரவிர்த்தந் தானோ மருவுறு நிவர்த்தமேயோ
தானிதை யிப்போ தைய சாற்றிட விரும்புகின்றேன்

இ-ள். ஞானியாஞ்சீவன்முத்தன் - ஞானவானுகிய சீவன்முத்தன், நயந்துசெய்கருமமியாது - விரும்பிச்செய்கின்ற கருமங்களைவை, மேனயந்தியற்றவேண்டும் - மேலும்அவற்றைவிரும்பிச்செய்யவேண்டியதா, விடுத்திடவேண்டுமேயோ - விடவேண்டியதா, மானமார்பிரவிர்த்தந்தானே - செய்யவேண்டுங்கால் நித்திய நைமித்திக காமியமென்னும் பிரவிர்த்தி விஷயமான கன்மமுழுது முன்போற்செய்யவேண்டியதா, மருவுறுநிவர்த்தமேயோ-காமியமல்லாத தத்தம் ஆசிரமத்துக்குவிதித்த நிவர்த்தி விஷயமான கன்மமாத்திரஞ்செய்யவேண்டியதா, தானிதையிப்போதைய-ஐயனே அஃதின்னதென் றிப்போது, சாற்றிட விரும்புகின்றேன்-சொல்லும்படி பிரார்த்திக்கின்றேன்—எ-று.

(அ-கை.) இங்ஙனம் பரத்துவாஜர் வினவுக்கு வான்மீக மகாருஷி ஞானிகள் ஞானவிருத்த கருமங்களைவிடுத்து ஞானபூமிகளின் பரிபாகமுறையே சத்கர்மங்களைச் செய்யவேண்டுமென்றும், செய்யுமிடத்து பிராரப்தம் பலவிதமாதலால் அஃது பிரவிர்த்தமென்றும், நிவர்த்தமென்றும், நிச்சயிக்கக்கூடாதென்றுங்கருதி உத்தரங்கூறுகின்றார்.

ஆதலாற்சகல கருமமும் விடுத்தே யான்மாவில்விருப்புற விருத்தல், தீதுசம்சாரச் சக்கரச்சுழறீர் செறிஞானோபாயமென் றியாமே, ஓதிய துணர்ந்து முமூட்சுவாநீயு முணுற்றிடுபோ தெவை தோஷ, பேதமுண்டாகா தவற்றினையாய்ந்து பிறழ்தரா தியற்றிடவேண்டும்

இ-ள். ஆதலாற் சகலகருமமும்விடுத்தே - ஆனதால் சகல கன்மங்களையும்விட்டு, ஆன்மாவில்விருப்புறவிருத்தல் - பிரமத்தில்விருப்புற்றிருப்பதே, தீதுசம்சாரச் சக்கரச்சுழறீர் - தீமையா

ன சம்சாரசக்கரத்திற் சுழலுதலை நீங்கப்பெறுகின்ற, செறிஞா னோபாயமென்றியாமே - பொருந்திய ஞானோபாயமென்று நாமே, ஓதியதுணர்ந்தும் - உபதேசித்ததையறிந்தும், மூமூட்சுவா நீயும் - மோக்ஷேச்சையுடைய நீரும், உஞற்றிடுபோதெவை - செய்யுங்கால் எக்கருமங்கள், தோஷபேதமுண்டாகாது-சிரவுஞ திகட்குவிரோதமின்றி சித்தவிக்ஷேபம் மலினமாந்தன்மை பா பம் முதலானகுற்றங்க ளுண்டாகாததோ, அவற்றினையாய்ந்து- அவைகளை ஆராய்ந்து, பிறழ்தராதியற்றிடவேண்டும் - பிசகாமல் செய்யவேண்டியது—எ-று. (கூ௭)

இதுவுமது.

மேலுமோ காம்யம் நிஷித்தவிக்ஷேபம் விரிவுறு க ருமங்கள் கூடா, எனுமச்சீவன் மனோகுணம் விடுத்தே யிகல்கரணஞ் சமமாக, சாலு மப்பிரம குணத்தொடுங் கூடிச் சாந்தனாய் விளங்குறின் மூன்று, காலு மச்சர்வ வியாபகமான கவின்பிரபு வாய் நிறைகின்றான்.

இ-ள். மேலுமோ - இன்னுங்கூறுமிடத்து, காம்யம் நிஷித்தவிக்ஷேபம் - காமியகருமமும் நிஷேதிக்கப்பட்ட தான்கரு மமும் சித்தவிக்ஷேபந்தருங் கருமமுமாகிய, விரிவுறுகருமங்கள் கூடா - விரிந்தகருமங்கள் செய்யக்கூடாது, எனுமச்சீவன் ம னோகுணம்விடுத்தே - இயலுமந்தப்புருஷன் மனத்தின்குணங்க ளைவிட்டு, இகல்கரணஞ்சமமாக - மாறுபடுகின்ற இந்திரியங்க ளையடக்கிச்சமமாக, சாலுமப்பிரம குணத்தொடுங்கூடி-மேலான பிரமகுணங்களோடு கூடிக்கொண்டு, சாந்தனாய்விளங்குறின் - உபசாந்தனாயிருந்தால், மூன்றுகாலுமச் சர்வவியாபகமான - மூ க்காலமும் சர்வவியாபகமான, கவின்பிரபுவாய்நிறைகின்றான்- மேலானபிரபுவாகப் பூரணமாகின்றான்—எ-று, பிரமகுணங்க

ளாவன - நிறைவு ஆனந்தம் இரண்டின்மை நிர்மலமாயிருக்கை சங்கமின்மை ஞானைகரசமாந்தன்மைமுதலியன. (௯௫)

இதுவுமது.

தேக மிந்திரிய மனம் புந்தி யிவற்றிற் சிறந்த தன்ஞூதிய நான்கு, பாகமாங் கோசா தீதவானந்தம் பகரதிற் சிறந்தது பிரமம், ஆகுநானெனச் சீவாத்துமா தன்னிலனுதினந் தியானமே புரிய, ஏகமாம் பிரம சொரூபான்ம ஞான மியைதரா முத்த னாகின்றான்.

இ-ள். தேகமிந்திரிய மனம்புந்தியிவற்றிற் சிறந்தது - தேகம் இந்திரியங்கள் மனது புத்திஇவைகளுக்குமேலானது, (ஏதென்னில்) அன்னூதியநான்குபாகமாம் - அன்னமயமுதலிய நான்குபிரிவான, கோசாதீத-கோசங்களுக்குமேற்பட்ட, ஆனந்தம்-ஆனந்தமயகோசமாகும், பகரதிற்சிறந்தது-கூறியவதற்குமேற்பட்டது, பிரமம் - எவற்றிற்கு மதிஷ்டானமான பிரமமே, ஆகுநானென - நான்ஆனேனென்று, சீவாத்துமாதன்னி லனுதினந்தியானமேபுரிய - எப்போதும் சீவாத்துமாவானவன் தனக்குள் தியானஞ்செய்தால், ஏகமாம்பிரம சொரூபான்மஞானம் - அத்வைதமான பிரம்மசொரூபத்தியானம், இயைதராமுத்தனாகின்றான் - அடைந்து சீவன்முத்தனாகிறான்---எ-று. (௯௬)

இதுவுமது.

மருவிய கருத்தா கரண காரியமும் வருபோக்தா போக போக்கியமும், விரிவுறு ஞாதா ஞான ஞேயமுமாய் விளங்கு மூவகைத் திரிபுடியும், பிரிவுற விடுத்திங்கிவைக்கேதுவாகப் பேசுபாதிகளெலா நீங்கி, பெருகுறு சுகதுக்காதியும்விடுத்துப் பிறங்குறின்முத்தனாகுவனே.

இ-ள். மருவியகருத்தா கரணகாரியமும் - சேர்ந்தகர்த்தா செய்கைசெய்காரியம் இவையும், வருபோக்தாபோக போக்கியமும் - உண்டான போகி போகம் போக்கியமிவையும், விரிவுறு ஞாதாஞான ஞேயமுமாய் - விரிவாகின்ற ஞாதா ஞானம் ஞேயமும் ஆகின்ற, விளங்குமூவகைத் திரிபுடியும் - தோன்றுகின்ற மூன்றுவிததிரிபுடியும், பிரிவுறவிடுத்து - நீங்கும்படிவிட்டு, இங்கிவைக்கேதுவாக - இங்கிவைகளுக்கேதுவாக, பேசுபாதிகளெலா நீங்கி - சொல்லப்பட்ட வுபாதிகளெல்லாமொழிந்து, பெருகுறுசுகதுக் காதியும்விடுத்து - பெரிதான சுகதுக்கங்களையும்விட்டு, பிறங்குறின்முத்தனுகுவனே - விளங்கினுல் சீவன்முத்தனுவான்—எ-று. (கஎ)

இதுவுமது.

சீவனெப்போது சர்வபூதத்துஞ் செறியாத்மனுகிய தனையும், மேவுறத் தன்னுட் சர்வமாம்பூதம் வேறுபாடறக் காணின் முத்தன், தாவுறுஞ் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தித் தானமூன்றும் விடுத் தப்பால், ஆவதாந் துரியானந்தமாபதத்தையடைந்திடின் முத்தனுகுவனே

இ-ள். சீவனெப்போது - சீவன்எப்போது, சர்வபூதத்தும் - சகலபூதங்களிலும், செறியாத்மனுகிய தனையும் - நிறைந்தவாத்மாவாகிய தன்னையும், மேவுறத்தன்னுள் - தனக்குள் பொருந்தியதாய், சர்வமாம்பூதம் - சர்வபூதங்களும், வேறுபாடறக்காணின்முத்தன் - பிரிவின்றிக்காணப்பெற்றுல் சீவன்முத்தனும், தாவுறுஞ்சாக்கிரம் - எழுகின்றசாக்கிரம், சொப்பனஞ்சுழுத்தி-சொப்பனம் சுழுத்தியுமென்கின்ற, தானமூன்றும் விடுத்தப்பால்-மூன்றவஸ்தையும்விட்டுமேல், ஆவதாந்துரியானந்தமாபதத்தை -

ஆனந்தமாகிய துரியஸ்தானத்தை, அடைந்திடின் முத்தனுகுவ னே - சேர்ந்தால் சிவன்முத்தனுவான்—எ-று. (௩அ)

இதுவுமது.

மேவு மிச்சீவன் றனக்குள சாக்ரம் விரிதரு சொப் பனமூலம், ஆவதாகிய வாசனையொடு கரும மஞ்ஞான நித்திரையாதி, ஓவற நீங்கு சுகாத்மிகையாகு முயர்தரு துரியம தென்னும், ஏவமில்பரம மாயிருந்திடுத லிசை யோக முடிவான சமாதி.

இ-ள். மேவுமிச்சீவன்றனக்குள - பொருந்தியவிந்தச் சீவ னுக்குண்டான, சாக்ரம்விரிதரு சொப்பனமூலம் - சாக்கிரம் சொப்பனம் சுழுத்தியவத்தைகளும், ஆவதாகிய வாசனையொடு - அவற்றிற்சேருவான வாசனையோடு, கரும மஞ்ஞான நித்திரை யாதி-கன்மம் அஞ்ஞான நித்திரை முதலியவை, ஓவறநீங்கும் - முற்றுநீங்கிய, சுகாத்மிகையாகும் - ஞானனந்த சொரூபையா கிய, உயர்தருதுரியமதென்னும் - மேலான துரியமென்கின்ற, ஏவமில்பரமமாயிருந்திடுதல் - களங்கமற்றபிரம்மமாகவிருத்தல், இசையோகமுடிவான சமாதி - கூறுகின்ற முடிவான சமாதி யாம்—எ-று. (௩௯)

இதுவுமது.

மேன்மையார் சுகானு பவமதுண்டாகும் விவேகி யாம் புருடர்க்கு மனதின், பான்மை நீங்கியபோ ததற் குவேருகப் பார்த்திடற் கொன்றுமின்மையினுல், மான் மிய சாந்தக் கைவல்ய வமிர்த வாரியின் மூழ்கிநீ வதிவா ய்,வன்மிகுபேத ஞானமா முதலை யியங்குவர்க் கடலலை யமிழ்தல்.

இ-ள், மேன்மையார்-மேன்மைபொருந்திய, சுகானுபவமு துண்டாகும் - ஆனந்தானுபவமுண்டாகும், விவேகியாம்புருடர்க்கு - விவேகமுள்ள புருடருக்கு, மனதின்பான்மைநீங்கியபோது - மனத்தன்மை நீங்கியபோது, அதற்குவேருக - அஃதின்றிவேருக, பார்த்திடற்கொன்று மின்மையினுல் - காணுதற்கொன்றுமில்லையாதலால், மான்மியசாந்தக்கைவல்ய - மகத்தானசாந்தமோக்ஷமென்கின்ற, அமிர்தவாரியின் மூழ்கி நீ வதிவாய் - அமிர்தசமுத்திரத்தில் மூழ்கியிருக்கக்கடவாய், என்மிகுபேதஞானமாமுதலை - என்றுபேதஞானமாகிற முதலைகள், இயங்குவர்க்கடலலையமிழ்தல்-சஞ்சரிக்கின்றவுப்புக்கடலலைகளில் மூழ்கிப்போகின்ருய்—எ-று. (தா-ம்.) அந்தபிரமத்தில் விசிராந்திபெற்றிருக்குமுனக்கு பேதஞானப்பிரசத்தியில்லை ஆதலால் கன்மபேதமாகிற உப்புக்கடலில் மூழ்கிற பிரசத்தி தூரத்திற்போய் விட்டதென்று கருத்து. (௯௦)

(அ-கை.) முன்சொன்ன ஈஸ்வரவுபாசனையைச்செய் அவரநுக்கிரகத்தால் யான் உனக்கு வசிட்டோபதேசப்படிசொல்லிய ஞானமார்க்கத்தினுலாவது, யோகமார்க்கத்தினுலாவது, தத்துவஞானமுண்டாகும்போது ஒன்றையுணர்ந்தால் எல்லாமுணர்ந்த-தாகுமதனுல் சகலசந்தேகங்களுக்கு மூலமான அஞ்ஞானமழிந்தால் விசிராந்தியுண்டாமென்றுகூறி முடிக்கின்ருர்.

அனுக்கிரகஞ்செய்த சகத்குருவாக வருஞ்ஞுருக்கொளுளும் பரமேசன், தனைப்பரமாக வுபாசனைசெய்யச் சாற்றிய வசிட்டோபதேசம், அனைத்தையுமுறையே பரத்வாஜமைந்த வறைந்தனனின்பொருட் டதனை, மனத்துற ஞானமல தியோகமார்க்க மதித்து நிச்சயித்திடக் கடவாய்.

இ-ள். அனுக்கிரகநிமித்தம் - அனுக்கிரகார்த்தமாக, சகத்குருவாக - லோககுருவாக, அருளுருக்கொளும்பரமேசன் - கிர்பாவடிவங்கொண்ட பரமேஸ்வரர், தனைப்பரமாகவுபாசனைசெய்ய - அவரோகதியாக வுபாசனைசெய்யும்பொருட்டு, சாற்றியவசிட்டோபதேசம் - கூறப்பட்ட வசிட்டருபதேசம், அனைத்தையுமுறையே - யாவற்றையுங்கிரமமாக, பரத்வாஜமைந்த - புத்திரனான பரத்துவாஜனே, அறைந்தனனின்பொருட்டு - உன்பொருட்டாக யான்கூறினேன், அதனைமனத்துற - அவற்றைமனதிற்பொருந்தும்படி, ஞானமலியோகமார்க்கம் - இந்தஞானமார்க்கத்தினூலாவது யோகமார்க்கத்தினூலாவது, மதித்து நிச்சயித்திடக்கடவாய் - நிச்சயமாகத் தெளிந்தறியக்கடவாய்—எ-று.

(அ-கை.) அங்ஙனம் சாஸ்திரம், குருபதேசம், சுவாநுபவம் இம்மூன்று மொத்து நிச்சயமுண்டாம்பொருட்டு அடிக்கடி அப்பொருளைச் சிந்திப்பதாகிய பராமர்சமும், வாக்கியத்தை ஆவிர்த்திசெய்வதாகிய அப்பியாசமும் அவசியம் வேண்டுமென்கின்றார்.

சாத்திர விசாரங் குருவுபதேசந் தனதநுபவ வாக்கியார்த்தம், நேத்திரமாக வப்பியாசஞ்செய்ய நிலைதரு சகலசித்தியுமாம், சாத்தியவேத நியதியீ தெல்லாச் சங்கற்பவிகற்பமும் விடுத்து, பாத்தியமாக நிரந்தரம் பழகிப் பாடமை நிலைபெறக் கடவாய்.

இ-ள். சாத்திரவிசாரம் - சுருதிவிசாரணையும், குருவுபதேசம் - குருவுபதேசத்தையும், தனதநுபவவாக்கியார்த்தம் - தனக்கநுபவமான மகா வாக்கியார்த்தங்களையும், நேத்திரமாகவப்பியாசஞ்செய்ய - ஒத்து அப்பியாசஞ் செய்துவந்தால், நிலைத

ருசகல சித்தியுமாம் - நிலையானசகல சித்திகளுமுண்டாகும், சா த்தியவேதநியதியீது - கூறியவேதத்தின் கட்டளையிதுவாகும், எல்லாச்சங்கற்ப விகற்பமும்விடுத்து - சகலவிகற்ப சங்கற்பங்க ளும்நீங்கி, பாத்தியமாக நிரந்தரம்பழகி - உரிமையாகவெப்போ தும் பழக்கஞ்செய்து, பட்டர்மனநிலைபெறக்கட்டவாய் - அலையும மனத்தை நிலைபெறச்செய்வாயாக—எ-று. (சுஉ)

(அ-கை.) பரத்வாஜர் குருவால் கரதலாமலகம்போல உப தேசிக்கப்பட்டு சுவாநுப்வம்பெற்று விளங்கி இராமமூர்த்தி சமா தியைவிட்டு விவகரித்தலை வினவுகின்றார்.

சுவாநுபவமா யான்மாவிற் றுரியயோக நிலையடை ந்தே, உவாவிற் குளிர்ந்த சீராம னுலகநோக்கினெழுந்த தெவ்வா,றவாவின் ஞானியானவவ னவனிவிவகா ரங்க ள்செயும், தவாத நெறியே துரைத்தருளுந் தனேயாது ணர்ந்து சரிப்பதற்கே.

இ-ள். சுவாநுப்வமா யான்மாவில் - (ஓ குருமூர்த்தியே) பிரமஸ்வரூபத்தில் சுவாநுபவமாக, துரியயோகநிலையடைந்தே - உபாதியற்றமேலான துரியயோகநிலைபெற்று, உவாவிற்குளிர்ந்த சீராமன் - பூரணச்சந்திரன்போற் குளிர்ச்சியடைந்த ஸ்ரீராமர், உலகநோக்கினெழுந்ததெவ்வாறு - உலகவிவகாரத்தில் வெளிப் பட்டெழுந்ததெப்படி, அவாவின்ஞானியானவவன் - இச்சைய ற்ற ஞானவானாகியஅவர், அவனிவிவகாரங்கள்செயும் - லோக விவகாரங்கள்செய்கின்ற, தவாதநெறியே துரைத்தருளும் - பிற ழாதமார்க்க மெவ்வண்ணமதைக் கிருபைசெய்து கூறக்கடவீர், தனேயானுணர்ந்து சரிப்பதற்கே - யானுமதையறிந்து நான்சமா தியீங்கியகாலத்து விவகரிப்பதற்கு—எ-று. (சுங)

(அ-கை.) வான்மீகமுனிவர் பின்பு விஸ்வாமித்திரருக்கும் வசிட்டருக்கும்நடந்த சம்பாஷணையைக் கூறுகின்றார்.

மகத்தாஞ் சாதுமனமுடைய மலர்க்கணிராமன் பரான்மாவில், மிகத்தானைக்கமாக்கலந்து விளங்குங்கால் விஸ்வாமித்திரன், சுகத்தவசிட்ட மகாருஷியைத் துதித்துநோக்கி மொழிகின்றான், இகத்தின் மகானுபாவனொன விசைக்கத்தகுமா குருநீரோ.

இ-ள். மகத்தாஞ்சாதுமனமுடைய - மேலானசாந்தமான மனதையுடைய, மலர்க்கணிராமன் பரான்மாவில் - பத்மலோசனனான ஸ்ரீராமர் பரமாத்மசுவரூபத்தில், மிகத்தானைக்கமாக்கலந்து விளங்குங்கால் - முழுதுமைக்கமாகக்கலந்து விளங்கியபோது, விஸ்வாமித்திரன் - விஸ்வாமித்திரமுனிவர், சுகத்தவசிட்டமகாருஷியை - ஆனந்தமடைந்திருக்கின்ற வசிட்டமகாருஷியை, துதித்துநோக்கி மொழிகின்றான் - தோத்திரஞ்செய்து நோக்கிச்சொல்லுகின்றார், இகத்தின்மகானுபாவனொன - இவ்வுலகததில் மகிமையுடையவராக, இசைக்கத்தகுமா குருநீரோ-சொல்லும்படியான கீர்த்தியுள்ள ஆசாரியர்நீரோயாம்—எ-று. (சுசு)

இதுவுமது.

முனைக் கனையடுத்த சீடனதுள்ள முதிர்தரச் சத்திபாதத்தால், கனமுறு முத்திக் கரையினி லேற்றக் கண்டனங் குருத்துவ நின்பால், பினமறு நோக்கம் பரிசநல்லுரையாற் பெரிது சீடன் றனதுடலில், மனனுறச் சிவமாப் பிரவேசமுண்டாக்கு மான்மிய முடையநீர் குருவாம்.

இ-ள். முனைந் தனையடுத்த - முன்பு தன்னையடுத்திருந்த, சிட்டனதுள்ளம் - சிஷ்யனுடைய மனது, முதிர்தாச் சத்திபாதத்தால் - பக்குவமாக சத்திபாதவசத்தால், கனமுறுமுத்திக்கரையினிலேற்ற - மேலான மோக்ஷத்துறையி லேறும்படிசெய்யும், கண்டனக்குருத்துவநின்பால்-குருத்திறத்தை உம்மிடத்தில்கண்டறிந்தோம், பினமறுநோக்கம்பரிச நல்லுரையால் - பிரிவின்றிய நோக்கம் பரிசம் நல்லுபதேசமிவற்றால், பெரிது சிட்டன்றனதுடலில் - மிகவுஞ் சிஷ்யனது தேகத்தில், மனனுறச்சிவமாப் பிரவேசமுண்டாக்கும் - மனதிற்பொருந்த மகாசிவப்பிரவேசத்தையுண்டாக்குகின்ற, மான்மியமுடையநீர் குருவாம்-மகாத்மியமுடைய நீரே குருவென்றுசொல்லப்படும்—எ-று. (சரு)

இதுவுமது.

இப்பெருந் தகையா மிராமனும் விசுத்த னியல்பாக விரக்தியு முடையோன், ஒப்பில் விசிராந்தி விருப்பமாத்திரத்தா லுயர்விசாரணையினு னிலையைச்,செப்பமாயடைந்தான் குருவுபதேசஞ் செயுந் தத்வ போதமுண்டாதற், கப்பெருஞ்சீட னறிவுகாரணமா மரிது பக்குவமிலாதவர்க்கே.

இ-ள். இப்பெருந்தகையா மிராமனும் - இப்பெருமபெருமையுடைய ஸ்ரீராமரும், விசுத்தனியல்பாக விரக்தியுமுடையோன் - பரிசுத்தமான இயல்பானவிராகமுடையவர், ஒப்பில் விசிராந்தி விருப்பமாத்திரத்தால் - மேலான விசிராந்தியைமாத்திரம் விரும்பினவராய், உயர்விசாரணையினால் - மேலான சாஸ்திரவிசாரணையினாலே, நிலையைச் செப்பமா யடைந்தான் - நிலையானபதத்தைச் செவ்விதாகவடைந்தார், குருவுபதேசஞ்செயுந் தத்வபோதமுண்டாதற்கு - குருவுபதேசஞானமடைதற்கு, அப்

பெருஞ்சீட்னறிவுகாரணமாம் - அந்தப்பக்குவமுள்ள சிஷியன றிவேகாரணமாம்; அரிதுப்க்குவமிலாதவர்க்கே - அபக்குவர்க ளுக்கு கிடைப்பதரிதாகும்—எ-று. (சுசு)

(அ-கை.) நல்ல சிஷியனிடத்தில் உபதேசித்த சாஸ்திர த்திற்குப் பயன் இங்குத்தானே காணப்படுமென்கின்றார்.

பிரத்தியக்ஷமதா மிந்தமாஞானம் பிரையோசனங் குருசிஷ்யர் தமக்கு, விரித்திடவேண்டி யிவ்விருவர்க ளும் மிக்கசால் புடையரா யிருப்பின், தரித்திடற்குரிய கைவல்யஞானந் தரும் புருஷார்த்தங்களனைத்தும், பொ ருத்தமாயடைதற் குரியராகுவர்மேற் புகன்றிடி லொப் பிவர்க் கியாரே.

இ-ள். பிரத்தியக்ஷமதாமிந்தமாஞானம் - இஷ்டார்த்தமாயி ருக்கின்ற இந்தப்பரமஞானம், பிரையோசனங்குருசிஷ்யர்தம க்கு-குருவுக்கும் சிஷ்யனுக்கும்பலனுகும், விரித்திடவேண்டில்- இன்னும் விரிவாகக் கூறவேண்டுமானால், இவ்விருவர்களுமிக் கசால் புடையராயிருப்பின் - இந்தயிருவரும் மிகுந்தசான்றாண் மையுடையவர்களானல், தரித்திடற்குரிய கைவல்யஞானம் - பெறத்தக்கபிரம்மக்கியானத்தை, தரும்புருஷார்த்தங்களனைத்து ம்-கொடுக்கின்ற புருஷார்த்தங்களெல்லாம், பொருந்தமாயடை தற்குரியராகுவர் - பொருந்தும்படி யடையத்தக்கவராவார்கள், மேற்புகன்றிடி லொப்பிவர்க்கியாரே - பின்னுங் கூறுங்கால் இ வர்கட்குச் சமானமற் றியாவருள்ளார்—எ-று. (சுஎ)

(அ-கை.) விஸ்வாமித்திரர் இவ்வாறு வசிட்டரைப்புகழ்ந் து பிரகிர்தத்திற் செய்யவேண்டியதைக் கூறுகின்றார்.

தவமிகுவசிட்ட முனிவரோயெம்பாற் றயைபுரிந் தி ராமனைச் சமாதி, இவணகன்றிட நீரெழுப்பிட வேண்டு மேனெனி னிலையானபதத்தில், பவமற நீரோ பரிணமித் துடையீர் பார்த்திடு மூலககாரியத்தில், நவமுற யாங்க ள் பிரவேசமாய் முயன்று நடித் திடுகின்றன மதனால்.

இ-ள். தவமிகுவசிட்டமுனிவரோ - மேலான தபமுடைய வசிட்டமகாருஷியே, எம்பாற்றயைபுரிந்து - எங்கள்பேரில் தய வுவைத்து, இராமனைச்சமாதி இவணகன்றிடநீ ரெழுப்பிடவே ண்டும்-இராமர்சமாதியைவிட்டு இப்போதெழும்படி செய்யவே ண்டியது, ஏனெனில்-ஏனென்றால், நிலையானபதத்தில் பவமற நீரோபரிணமித்துடையீர்-நிலையான சுத்தபதத்தில் நீர்தானே பந்த மின்றியமைதிபெற்றிருக்கின்றீர், பார்த்திடு மூலககாரியத்தில்-கி ரிசியமான வுலகவிஷையத்தில், நவமுறயாங்கள் பிரவேசமாய் முயன்று - பலவாறுபிரவேசித்து முயற்சியோடும், நடித்திடு கின்றன மதனால் - விவகாரஞ் செய்கின்றோமாதலால் — எ-மு.

இதுவுமது.

யாதுகாரியத்தை நாடியா னிங்ஙனடைந்தனன் றசு ரதவரசன், ஏதமிலென்றுற் பிரார்த்திக்கப்பட்ட தெந்த மாயாகசித்தியதாம், நீதமாமந்தக் காரியந்தன்னை நினைந் துயர்பெருந்தகை முனியே, ஆதரவோடு மிராமனையெ ழுப்பு மவதரித்துள பயனடைய.

இ-ள். யாதுகாரியத்தை நாடியானிங்ஙனடைந்தனன் - எ து விஷையத்தைநோக்கி யானிங்குவந்தேனோ, தசரதவரசன் ஏதமிலென்றுற் பிரார்த்திக்கப்பட்டது - குற்றமற்ற வென்றால் தசரதமகாராஜன்பிரார்த்திக்கப்பட்டது, எந்தமாயாக சித்தியதா

ம் - எந்தமகத்தான யாகசித்தியாகும், நீதமாமந்தக் காரியந்த ன்னை - விதியானவந்த விஷயத்தை, நினைந்துயர்பெருந்தகை முனியே-மேன்மையுடைய முனிவரே ஆலோசித்து, ஆதரவோடுமிராமனையெழுப்பும் - அன்போடு இராமனை சமாதியினின்றும் எழச்செய்யும், அவதரித்துளபயனடைய - அவர் அவதாரஞ் செய்ததற்குப் பயனுண்டாகும்படி—எ-று. (சகூ)

(அ-கை.) மேல் இராமாவதாரத்திற் செய்யுங்காரியங்களைக் கூறுகின்றார்.

தேவர்கடுயரந் தீர்ந்திடுமாறு சித்தவாச்சிரமத்தில் வந்தே, மாவிராமன்றா னரக்கரையழிப்பான் மற்றகலி கைசாப மொழிப்பான், ஏவுறுமந்தக் கோதண்டந்தன் னையிறுத்தபின் சனகபுத்திரியாம், மாதுசீதையினை யுல கெலாம்போற்ற மணஞ்செயப் போகின்றான் முனியே.

இ-ள். தேவர்கடுயரந்தீர்ந்திடுமாறு - தேவர்களது துன்பங் கணிங்கும்படி, சித்தவாச்சிரமத்தில்வந்தே - நமதுசித்தாச்சிரமத்துக்குவந்து, மாவிராமன்றானரக்கரையழிப்பான் - மகத்தானவிந்தராமரே இராக்கதரைவென்றுசெயிப்பார், மற்றகலிகைசாபமொழிப்பான் - அகலிகைக்குமுன்புண்டானசாபத்தைநீக்குவார், ஏவுறுமந்தக் கோதண்டந்தன்னை - பாணப்பிரயோகஞ்செய்யும் கோதண்டத்தை, இறுத்தபின் - ஒடித்தபின்பு, சனகபுத்திரியாமாது சீதையினை - சனகமகாராஜன் புத்திரியான சீதாதேவியை, உலகெலாம்போற்ற - உலகங்களிலுள்ளோர்துதிசெய்ய, மணஞ்செயப்போகின்றான் முனியே - ஓ! வசிட்டமுனிவரே திருக்கலியாணஞ் செய்வார்—எ-று. (ருo)

இதுவுமது.

மங்கலக் கோலத்துடன் வருநெறியில் வாதுசெய்
பரசிராமன்றன், துங்கமாகதியைத் தடுத்தபின் றனது
தொல்பிதுர்பிதாமக ராச்சியம், தங்கியங் ககன்று சீவன்
முத்தமதாய்த் தளர்பய மாசையும் விடுத்தே, அங்குறு
வனவா சந்தனிற்றண்ட காரண்ய விருடியர்க் கன்பாய்.

இ-ள். மங்கலக்கோலத்துடன் வருநெறியில் - கலியாண க்கோலத்தோடும் வருகின்ற மார்க்கத்தில், வாதுசெய்பரசிராம ன்றன் - வாதாடியபரசிராமரது, துங்கமாகதியைத்தடுத்தபின் - பரலோககதியை விலக்கியபின்பு, தனதுதொல் பிதுர்பிதாமகரா ச்சியம் - தனதுதந்தை பாட்டன்மார் பரம்பரையாய்வந்த இராச் சியத்தில், தங்கியங்ககன்று - சிலகாலமிருந்து அங்ஙனம்விட்டு, சீவன்முத்தமதாய்த் தளர்பயமாசையும்விடுத்து - சீவன்முத்தராக பயம் ஆசை யிரண்டும்விட்டு, அங்குறுவனவாசந்தனில் - அவ ன்செய்தவனவாசத்தில், தண்டகாரண்ய விருடியர்க்கன்பாய் - தண்டகாரண்ய விருஷிகளுக்கு அன்புடையவராக—எ-று. (௫௧)

இதுவுமது.

அரக்கரை வதஞ்செய் தானபின் றீர்த்த மனந்தமு
ண்டாக்குவ னதனுல், தரைக்கணுற் சகல பிராணிகடா
மே சத்தியடைதருஞ் சீதை, பிரிந்திடக் கொடுபோந்
சந்சமைதனுற் பெரிதிராவணுதியர் வதஞ்செய், திரத்த
ஞ முலதின் மாதரிச்சையுளோர் செறிந்திடு மெளிமை
யும் விளக்கும்.

இ-ள். அரக்கரை வதஞ்செய்தானபின் - இராக்ஷசசங்கா ரஞ்செய்தபின்பு, தீர்த்தமனந்தமுண்டாக்குவன் - புண்ணியதீ

த்துங்கள்பலவுண்டாக்குவார், அதனால் தனைக்கனார் சகலபிராணிகடாமே சத்கதியடைதரும் - உலகத்திலுள்ள சீவர்கள் நற்கதியடைவார்கள், சீதைபிரிந்திடக்கொடுபோஞ்சஞ்சலமதனால் - சீதாதேவியைவிட்டுத் தானீங்கும்படி இராவணன் கொண்டுபோன விதனத்தால், பெரிதிராவணாதியர்வதஞ்செய் திரத்தனும் - மிகுதியானவவ்விராவணன் முதலானவர்களை வதைசெய்து செயம்பெற்று, உலகின்மாதரிச்சையுளோர் - உலகத்தில்பெண்ணாசையுடையோர், செறிந்திடு மெளிமையும்விளக்கும் - அடைகின்றதாழ்வையும் யாவருமறிந்து நடக்க விளக்கஞ்செய்வார்—எ-று. (ருஉ)

இதுவுமது.

வானரப்படைகள் யுத்தத்தின்மாய வருந்தியிந்திரன்றரும் வரத்தால், ஆனவ ருயிர்பெற் றிடப்புரிந்திடுவா ரக்கினிப் பிரவேசத்தினாலே, மானவச்சீதை தனைப்பரிசுத்தம் வாய்ந்திட வுலகவர் மதிக்க, மேன்மையார் தமது புகழ்தரு மொழுக்கம் விளங்குற விவகாரம்புரிவார்.

இ-ள். வானரப்படைகள் யுத்தத்தின்மாய - வானரசேனைகள் சண்டையின்மடிந்து போனதால், வருந்தி யிந்திரன்றரும்வரத்தால் - துன்புற்று இந்திரன்கொடுத்தவரத்தினால், ஆனவருயிர்பெற்றிடப் புரிந்திடுவார் - அவ்வானரங்கள் சீவிக்கும்படி செய்வார், அக்கினிப்பிரவேசத்தினாலே - தீயிற்குளித்தெழுதலினால், மானவச்சீதை தனைப்பரிசுத்தம் வாய்ந்திட - மேன்மையான சீதாதேவி விசுத்தமடைதலினால், உலகவர்மதிக்க - உலகிலுள்ளோர் துதிக்கத்தக்கதாய், மேன்மையார்தமது புகழ்தருமொழுக்கம் - மேலான தமது கீர்த்திமார்க்கம், விளங்குற விவகாரம்புரிவார் - பிரகாசிக்கும்படி இராச்சியவிவகாரஞ்செய்யப்போகின்றார்-எ-று.

(அ-கை.) ஸ்ரீராமர் சீவன்முத்தராயிருந் தரசாட்சிபெற்று கர்மவிதி வழுவாது நிக்கிரக அநுக்கிரகஞ் செய்வரென்கின்றார்.

ஆசைதீர் சீவன் முத்தராயிருந்து மபிஷேகஞ்செய்துகொண் டரசாய், மாசறுமனத்தா லிராச்சியபார மருவுங்கன் மாதிகாரிகளாம், பேசியவுலகோர் கதிபெறுமாறு பிறழ்தராக் கருமகாண்டியராம், ஏசறுஞானங் கருமமென் றிரண்டு மேன்றவர் கதிபெறத் தரிப்பார்.

இ-ள். ஆசைதீர்சீவன் முத்தராயிருந்தும் - அவாவின்றிய சீவன்முத்தராயிருந்தாலும், அபிஷேகஞ்செய்துகொண்டரசாய் - பட்டாபிஷேகஞ் செய்துக்கொண்டு அரசனாகி, மாசறுமனத்தால் - களங்கமற்றமனதினால், இராச்சியபாரமருவும் - இராச்சியாதிகாரத்தைப் பொருந்துவார், கன்மாதிகாரிகளாம் - கர்மானுஷ்டானிகளான, பேசிய வுலகோர் கதிபெறுமாறு - கூறப்பட்ட சனங்கள் கதியடையும்படி, பிறழ்தராக்கருமகாண்டியராம்-கருமகாண்ட விதியுடையவராவார், ஏசறுஞானங் கருமமென் றிரண்டும் - குற்றமற்ற ஞானம் கருமமென்னு மிரண்டும், ஏன்றவர்கதிபெறத் தரிப்பார் - அவ்வவற்றிற்குரியவர்கள் கதியடையும்படி தாமே யவ்விரண்டையு மனுஷ்டித்துக்காண்பிப்பார்— எ-று. இங்கு ஞானமென்பது ஈஸ்வரவுபாசனை. (ருச)

இதுவுமது.

இவ்வுலகத்திவ் விராமனை யிப்போ தெவர்தரி சனஞ்செயப் பெறுவார், செவ்விதிற்றியானம் பின்புசெய்பவருஞ் சீர்த்தியைக் கேட்பவர் தாமும், திவ்விய மகிமை யோதிக்கப் படுவார் தெளிதரத் தம்மையெப் போதும்,

அவ்வியமின்றி யடைந்திடப் பெறுவா ரியாவர்க்கு மருள்செய்வர் மூத்தி.

இ-ள். இவ்வுலகத்திவ் விராமனை யிப்போது-இந்தவுலகத்தில் இப்போது இந்தராமனை, எவர்தரிசனஞ்செயப்பெறுவார்-யாவர் தரிசனஞ்செய்யக் கிடைக்கின்றவர்களோ, செவ்விதிற்றியானம்பின்பு செய்பவரும்-பிற்காலத்தும் நன்ருகத்தியானஞ்செய்பவர்களும், சீர்த்தியைக் கேட்பவர்தாமும் - இவரதுபிரபாவத்தை வினவுகின்றவர்களும், திவ்வியமகிமை போதிக்கப்படுவார்-இவரது மேலானமகத்துவத்தை பிறராற்றெரிந்துக்கொள்பவர்களும், தெளிதரத் தம்மையெப்போதும் - சதாதம்மைத் தியானந்தாற்கண்டு, அவ்வியமின்றி யடைந்திடப்பெறுவார் - நிற்சலமனதா யடையப்பெற்றவர்களும், யாவர்க்கு மருள்செய்வர்மூத்தி - இத்தன்மையரான பக்தசனங்களுக்கெல்லாம் முத்திகொடுப்பார்—எ - று. (௫௫)

(அ-கை.) இராமாவதாரத்தில் நடக்கப்போகின்ற நிக்கிரக அநுக்கிரக கிர்த்தியங்களைக்கூறி சபையிலுள்ளோர் அவரைத்தொழும்படி கூறுகின்ருர்.

வான்புகழ் புருஷோத் தமராமச்சந்திர வள்ளலார்மூன்றுலகவர்க்கும், தான்மகி ழெனைக்கு மிட்டமாமிவைவேதயையொடு நிறைவேற்றத்தக்க, பான்மையவென்னப் புகன்றந்தச் சபையைப் பார்த்திவணிருந்துளோர்யாரும், மேன்மையா ரிவரை நமஸ்காரஞ் செய்யின்வேண்டுசித் திகளெலாம் வசமாம்.

இ-ள். வான்புகழ்புருஷோத் தமராமச்சந்திர வள்ளலார் - மேலான துதிபெற்ற புருஷோத்தம ராமச்சந்திர தயாளுவான

வர், மூன்றுலகவர்க்கும்-திரிலோகத்துள்ளோருக்கும், தான்மகி ழெனக்கும் - தம்மாலன்பு செய்யப்பட்டயெனக்கும், இட்டமா மிவையே - விருப்பமான விவைகளே, தயையொடு நிறைவேற் றத்தக்க - தயவோடு நிறைவேற்றவேண்டிய, பான்மைய வெ ன்னப்புகன்று-செயல்களிலவையென்றுகூறி, அந்தச் சபையைப் பார்த்திவணிருந்துளோர்யாரும் - (விஸ்வாமித்திரர்) அந்தச்சபை யைப்பாராது இங்கிருக்கின்றயாவரும், மேன்மையாரிவனை நம ஸ்காரஞ்செய்மின் - மேலான இவ்விராமனை நமஸ்காரஞ்செய் யுங்கோள், வேண்டு சித்திகளெலாம்வசமாம்-உங்களுக்கு விருப் பமான சகல சித்திகளும் வசப்படுமென்றுகூறி மேலும்—எ-று.

வேறு சாதனமொன் றின்றியே நுமக்கு வேண்டி ய ஜெயமெலா முண்டாம், தேறிய நும்முள் யாதொருபு ருஷன் சிறந்திடு மிந்தராமனைப்போல், ஆறியசீவன் மு த்தனாய் விகற்ப மகன்றிடு சமாதியிலமர்ந்து, கூறும் வி சிராந்தி யடைந்திடப் பெற்றோன் குறைவிலானந்தத்தி ல் வாழ்க.

இ-ள். வேறுசாதனமொன்றின்றியே - மற்றுவேறொருசகாயமுமில்லாமலே, நுமக்கு வேண்டியசெயமெலாமுண்டாம்- விரும்பிய ஜெயமெல்லாமடைவீர்கள், தேறிய நும்முள் யாதொருபுருஷன் - தெளிவுடைய வுங்களுக்குள்ளே யாதொருபுருஷன், சிறந்திடுமிந்த ராமனைப்போல் - சிரேஷ்டமான இந்தராமனைப்போல், ஆறிய சீவன்முத்தனாய் - குளிர்ந்த சீவன்முத்திபெற்றவராய், விகற்பமகன்றிடு சமாதியிலமர்ந்து - நிருவிகற்பசமாதியில் நின்று, கூறும் விசிராந்தி யடைந்திடப்பெற்றோன்-சொல்லப்பட்ட விசிராந்திச்சுகம்பெற்ற அவன், குறைவிலானந்தத்தில்வாழ்க - பூர்ணானந்தத்தில் வாழக்கடவன்—எ-று. (ருள)

(அ-கை.) இவ்வாறு விஸ்வாமித்திரர் சொல்லிக்கொண்டு வந்ததைக்கேட்ட பின் அங்கு நடந்ததை வான்மீகமகாருஷி எடுத்துச் சொல்கின்றார்.

இவ்வகைவிஸ்வா மித்திரமுனிவ னிசைத்தவை யன்பொடுங்கேட்டு, செவ்விய சித்தர்யோ கீந்திராகத் திகழ்வசிட்டாதியங் கியாரும், எவ்வமி லிராமன் வருஞ்சரிதத்தை யினிதுறக் கேட்டமையாலே, திவ்விய சரணம் புயப்பொடிதன்னிற் சிந்தையுமன்பும்வைத் தனரே.

இ-ள். இவ்வகை - இந்தப்பிரகாரம், விஸ்வாமித்திரமுனிவனிசைத்தவை-விஸ்வாமித்திரமுனிவர் சொல்லிக்கொண்டுவந்ததை, அன்பொடுங்கேட்டு - அன்புடன்கேட்டு, செவ்விய சித்தர்யோ கீந்திராகத் திகழ்வசிட்டாதியங்கியாரும்-சிறந்தசித்தர்கள் யோகீந்திரராகவிளங்கும் வசிட்டர்முதலிய அங்கிருந்தவர்கள்யாவரும், எவ்வமிலிராமன் வருஞ்சரிதத்தை - களங்கமற்ற இராமரது நடக்கப்போகின்ற சரித்திரத்தை, இனிதுறக்கேட்டமையாலே - மிக்கசந்தோஷமாகக் கேட்டபடியால், திவ்வியசரணம்புயப் பொடிதன்னில் - அவரதுஅழகிய சரணாரவிந்ததூளியில், சிந்தையுமன்பும்வைத்தனரே - நினைப்பும் அன்பும் பொருந்தியிருந்தார்கள்—எ-று. (ருஅ)

இதுவுமது.

சீதாபதியாம் ரகுநாதன் திவ்வியசரிதங் கேட்டதினால், வேதாதியதேர் வசிட்டமுனி மேலுமுள்ள மகாருஷிகள், போதாமையினாற் சந்தோடம் பொருந்தாநின்னும் பிறரன்பால், ஓதாநின்ற வதுகேட்டுந் தாமேயுணாத் துமுவப்புற்றார்.

இ-ள். சீதாபதியாம் ரகுநாதன் - சீதைக்குநாயகரான ஸ்ரீ ராமமூர்த்தியினது, திவ்வியசரிதங் கேட்டதினல் - மேலானசரித்திரத்தைக் கேட்டுவந்ததினலே, வேதாகியதேர்வசிட்டமுனி- வேதாதிய சாஸ்திரமுணர்ந்த வசிட்டமுனிவரும்; மேதுமுள்ள மகாருஷிகள் - இன்னும் அங்கிருந்த மகாருஷிகளும், போதாமையிருந்சந்தோடம்பொருந்தாது - திர்ப்தியின்மையாற் சந்தோஷப்படாமல், இன்னும் பிறரன்பால் - இன்னமு மற்றவர்களன்பினலே, ஓதாநின்ற வதுகேட்டும் - கூறுகின்ற அச்சரிதத்தைக் கேட்டுக்கொண்டும், தாமேயுரைத்துமுவப்புற்றார்-தாமேயதை பின்னுமெடுத்துக்கூறிக்கொண்டும் சந்தோஷமடைந்தார்கள்-எ-று.

(அ-கை.) வசிஷ்டமுனிவர் சந்தோஷமடைந்து விஸ்வாமித்திரருஷிக்குச் சொல்லுகின்றார்.

அந்தவசிட்ட பகவானு மமலமுனிவ னகமலர்ந்தே
இந்தவிஸ்வாமித்திரனுமிணையில்தவத்தோன்முகநோக்கி
பந்தமகன்ற முனிநாதா பத்மதளலோசனராமன் [னே.
முந்துசன்மத் தியாவனிவன் முதிர்வானவனே மானிட

இ-ள். அந்த வசிட்ட பகவானு மமலமுனிவ னகமலர்ந்தே - அந்தவசிட்டபகவானுனை பரிசுத்தமுனிவர் மனமகிழ்ந்து, இந்தவிஸ்வாமித்திரனு மிணையில் தவத்தோன் முகநோக்கி- இந்த விஸ்வாமித்திரரான ஒப்பற்ற தபசியினது முகத்தைப்பார்த்து, பந்தமகன்ற முனிநாதா - பாசபந்தமின்றிய முனிசிரேஷ்டரோ? பத்மதளலோசனராமன் - செந்தாமரையிதழ்போன்ற கண்களையுடைய ஸ்ரீராமர், முந்துசன்மத்தியாவனிவன் - முற்சனனத்தில் எத்தன்மையர், முதிர்வானவனே மானிடனே-தேவனே அல்லது மானிடனே கூறக்கடவீர்—எ-று. (௬௰)

(அ-கை.) வசிஷ்டர்வினவுக்கு விஸ்வாமித்திரர் உத்தரங் கூறுகின்றார்.

இச்சபைதன்னில் நிறைந்துளோர்யாரு மினிதுகே ட்டுணர்தரக்கூறும், முச்சகம்போற்று முனிவரோயென் ன மொழிதருஞ் சபையுளீர் கேண்மின், நிச்சயஞ் சா க்ஷாத் வாசுதேவப்பேர் நிகழ்பகவானென நினைமின், பொச்சமி லன்பாற் போற்றுமி னிவனே புராணவப் பர மமா புருஷன்.

இ-ள். இச்சபைதன்னில் நிறைந்துளோர்யாரும் - இந்தச் சபையில் நிறைந்திருக்கின்ற யாவரும், இனிதுகேட் டுணர்தரக் கூறும் - விருப்பமாகச்சேட் டுணரும்படி சொல்லுமென்று, முச் சகம்போற்று முனிவரோயென்ன - திரிலோகங்களும் துதிசெய் கின்ற முனிவரோயென்று, (வசிட்டர்கூற) மொழிதருஞ் சபையு ளீர்கேண்மின் - (அவ்விஸ்வாமித்திரர்) சபையிலுள்ளோரைப் பார்த்து நீங்கள் கேட்கக்கடவீரென்று, (சொல்லத்தொடங்குகி ன்றார்) நிச்சயஞ் சாக்ஷாத் வாசுதேவப்பேர் நிகழ்பகவானென நினைமின் - சாக்ஷாத் அந்த வாசுதேவனென்று சொல்லப்பட்ட பகவானே இவனென்று நிச்சயமாய் எண்ணுங்கோள், பொச்சமி லன்பாற்போற்றுமின் - உண்மையான பக்தியுடன் துதிசெய்யு ங்கோள்; புராணவப் பரமமாபுருஷன் - ஆதியாய்நின்ற வந்தப் பரமபுருஷோத்தமனிவனே—எ-று.　　(கூக)

இதுவுமது.

நீடுமன் னிவனே வுலகுபகார நிமித்தமப் பாற்கட ல் கடைந்தோன், நாடியசுட்ட மாங்களுக் குடைய நவை யிலா வுபநிடதங்கள், தேடிய வுண்மைப் பொருள்யாரி

பூர்ண செவ்விய வானந்த வடிவாய்க், கூடியே நிறைந்தோன் ஸ்ரீவச்சமென்னுங் குறிமறு மார்புள புருஷன்.

இ-ள். நீமென்றிவனே வுலகுபகார நிமித்தம் - நெடுங்காலத்திற்கு முன் இவரோ லோகோபகார நிமித்தமாக, அப்பாற்கடல் கடைந்தோன் - அந்தத் திருப்பாற்கடலைக் கடைந்தவர், நாடிய கூட்மாங்கருத்துடைய - ஆராய்கின்ற இரகசியப்பொருளையுடைய, நவையிலா வுபநிடதங்கள் - குற்றமற்ற வேதங்கள், தேடியவுண்மைப்பொருள் - தேடப்பட்டமெய்ப்பொருள், பரிபூர்ணசெவ்விய வானந்தவடிவாய் - எங்குநிறைந்த பரமானந்தவடிவாக, கூடியேநிறைந்தோன் - வியாபித்துநின்றவர், ஸ்ரீவச்சமென்னுங் குறிமறுமார்புள புருஷன் - ஸ்ரீவச்சமென்று குறிக்கப்பட்ட மறுவையுடைய அந்தப் புருஷோத்தமன்—எ-று.

இதுவுமது.

இத்தகு பெரியோன் சீராமனாக விங்கவ தரித்திருக்கின்றான், பத்தியாற் பிரசன்ன மாக்கிடைத் தவர்க்கு பாலிப்பன் புருஷார்த்தமனைத்தும், சித்தமார்சினத்தாற் சங்கரித்திடுவன் செகவசே தனம்பினும் படைப்பன், நித்தமாமிவனே விஸ்வகர்த்தாவாய் நியமாக்ஷண வெக்யமூர்த்தி.

இ-ள். இத்தகுபெரியோன் சீராமனாக விங்கவதரித்திருக்கின்றான் - இங்ஙனங்கூறப்பட்ட பெருந்தகைமை யுடையவரோ ஸ்ரீராமராக இவ்விடத்தில் அவதாரஞ்செய்திருக்கிறார், பத்தியாற்பிரசன்னமாக் கிடைத்தவர்க்கு - அன்பினால் பிரசன்னராகத் தரிசித்தவர்களுக்கு, பாலிப்பன்புருஷார்த்தமனைத்தும் - சகலபுருஷார்த்தங்களையுங் கொடுப்பார், சித்தமார் சினத்தாற் சங்

கரித்திடுவன்-மனதிற்கோபங்கொண்டவராக சங்காரஞ்செய்வார், செகவசேதனம்பினும்படைப்பன்-உலகமான சட்ங்களைப்பின்னுஞ் சிருட்டிப்பார், நித்தமாமிவனே விஸ்வகர்த்தாவாய்-நித்தியமானயிவரோ அகிலேசனுக, நியமரக்ஷண வெக்கியமூர்த்தி - விதிக்கின்றவருமாய் போஷிக்கின்றவருமாய் யாகாதிகளுக்குத் தலைமையான மூர்த்தியாகவு மிருக்கின்றார்—எ-று. (சுங)

இதுவுமது,

சாரமற்றற்ப மாகுமிச்சமுசா ரத்தினை விசாரித்து நீக்கி, சேர்தரு ஜகத்தைக் கடந்திராகாதி தீர்ந்திடுதெளிஞர்களாலே, சார்தரப்பெற்ற வானந்தக்கடலாந் தற்பரமிராமனே காண்மின், ஓர்தரிஞெருகால் முத்தனேபோலு முயராத்ம நிஷ்டனுமாமே.

இ-ள். சாரமற்றற்பமாகும்-நிஷ்ப்லமாய்அற்பமாகவிருக்கிற, இச்சமுசாரத்தினை விசாரித்துநீக்கி-இந்தச்சமுசாரபாரத்தைக்கண்டறிந்துநீக்கி, சேர்தருசகத்தைக்கடந்து - தோற்றுகின்ற சகமோகத்தைக்கடந்து, இராகாதி தீர்ந்திடு தெளிஞர்களாலே - இச்சைமுதலியவற்றை யொழிந்திருக்கின்ற பெரியோர்களாலே, சார்தரப்பெற்ற வானந்தக்கடலாம் - அடையப்படுகின்ற ஆனந்தசமுத்திரமான, தற்பரமிராமனேகாண்மின் - பரப்பிரமம் இந்தஇராமனோ கண்டறியுங்கள், ஓர்தரிஞெருகால் முத்தனேபோலும் ஒருசமயம் சீவன்முத்தனைப்போ லிருப்பார், உயராத்மநிஷ்டனுமாமே-மேலான ஆத்மநிஷ்டருமாவார்—எ-று. (சுச)

துரியமா பதமென் றிடப்படு மொருகால் தொன்மாயைப் பிரேரக னொருகால், புரியு மம்மாயை தனிற்பிணிப்புண்ட புருடனுமாகு மோர்காலே, அரியநால்வேதம்

வடிவமாப்பெற்றே யகன்றிடு மூக்குணக்காட்டை, பெரி யவேதாந்தப் பொருளதாய் நிறைந்து பெற்றிடும் விஜ யமுமன்றே.

இ-ள். துரியமாப்தமென்றிடப்படுமொருகால்- ஒருசமயம் மகத்தான துரியபதமாகச்சொல்லப்படுவார், தொன்மாயைப் பி ரோகரொருகால் - ஒருசமயம் அநாதிமாயையைப் பிரேரிக்கின் றவராவர், புரியுமம்மாயைதனிற் பிணிப்புண்ட-இயங்குமந்த மா யையிற் கட்டுப்பட்ட, புருடனுமாகுமோர்காலே-புருஷனைப்போ லவுமிருப்பார், அரியநால்வேதம் வடிவமாய்ப்பெற்றே- அருமை யான நான்குவேதங்களையும் தமது சுவரூபமாக விருக்கப்பெற்று, அகன்றிடு மூக்குணக்காட்டை - மூக்குணடவியைக் கடந்திருப் பார், பெரியவேதாந்தப் பொருளதாய்நிறைந்து-மேலானவேதங் களின் பரமார்த்தப்பொருளாயிருந்து, பெற்றிடும்விஜையமுமன் றே - ஆச்சரியப்படத்தக்க ஜெயம்பெற்றிருக்கின்றார்—எ-று.()

இவர் சதுர்ப்புயமார் பாலன விஷ்ணு விவர் சது ரூகந்தரும் பிரமன், தவமிகு மிவரோ மூன்று நேத்திரஞ் சேர் சங்காரஞ்செய் மகாதேவன், பவமறுமிவரோமாயை யைச் சேர்ந்து பற்றிடும் பிறவினைய மகானும், இவனுரு பகவான் மோக நித்திரைதீர்ந் திச்சகஞ் சதாவிழித் தளி ப்பார்.

இ-ள். இவர் சதுர்ப்புயமார் பாலனவிஷ்ட்ணு - இவர்தா னேந்நான்கு புஜங்களுடன் ரக்ஷகத்தொழில்செய்கின்ற விஷ்ட் ணு, இவர்சதுமுகந்தரும்பிரமன் - இவர்தான் நான்முகமுடைய வராய் சிருட்டித்தொழில்செய்கின்ற பிரமதேவன், தவமிகுமிவ ரோ - மகாதபமுடைய இவரோ, மூன்றுநேத்திரஞ்சேர் சங்காரஞ்

செய்மகாதேவன் - திரிநேத்திரங்களுடையவராய் சம்மாரத்தொழில்செய்யும் மகாதேவன்; பவமறுமிவரோ மாயையைச்சேர்ந்து பற்றிடும்பிறவியை - பிறப்பற்ற இவரோ மாயையைக்கூடி பிறவியையடைகின்றவரும், மகானுமிவனுறுபகவான் - மகாத்மாவாகயிங்கவதரித்திருக்கின்ற பகவானே, மோகநித்திரைதீர்ந்திச்சகஞ்சதாவிழித்தளிக்கும் - மோகநித்திரையின்மையால் இந்தச்சகத்தை எப்போதுஞ் சாக்ரமுள்ளவராய் இரக்ஷிக்கின்றார் எ-று.

உருவமி லிவரோ சகலமாமுருவ முடையவர் விக்கிரமமதனுல், தருமகாவிஜைய மடைவதுபோலுஞ் சார்தேசிற் பிரகாசமாவதுபோல், வருமுயர் சுருதி விசாரணையாலே மருவுஞானோதயம் போலும், அருமையாமிவர் தாங் கெருடனுற் றரிக்கு மற்புதமூர்த்தி யாகின்றார்

இ-ள். உருவமிலிவரோ சகலமாமுருவமுடையவர் - ஓருருவமுமில்லாத விவர் தான் சகலரூபங்களையுமுடையவர், விக்கிரமமதனுல் தருமகாவிஜைய மடைவதுபோலும் - பராக்கிரமத்தினுல் வரும் ஜயமடைகின்றதுபோலவும், சார்தேசிற்பிரகாசமாவதுபோல் - வருந்தேஜசினுலே பிரகாசமுண்டாவதுபோலவும், வருமுயர்சுருதிவிசாரணையாலே மருவுஞானோதயம்போலும் - உண்டான சுருதிவிசாரணையினுல் ஞானோதயமுண்டாதல்போலவும், அருமையா மிவர்தாம் - அருமைப்பொருளா யிருக்கின்ற இவரோ, கெருடனுற்றரிக்குமற்புதமூர்த்தியாகின்றார் - கெருடனாலே தாங்கப்பட்டபரமமங்கள மூர்த்தியாயிருக்கின்றார்—எ-று.

எவர்தமக் கிந்தப்பரமயாபுருஷ னிசைகெழு புத்திரனுமந்தத், தவமிகு மரசாந் தசரதன்றானே தன்னியனும் காலிலந்தன்னில், பவமுறு மியாவன் மனத்தினு லெந்தப்

பார்த்திபன் பகையென நினைக்கும், அவமுறு மந்த வி
ராவணன்றானு மருள்செயப்படும் பாக்கியசாலி.

இ-ள், எவர்தமக்கிந்தப் ப்ரமமாபுருஷன் - யாவருக்கிந்த மகத்தானதர்மபுருஷன், இசைகெழுபுத்ரனுமந்த - கீர்த்திபெற்றபுத்ரனாகப் பிறந்தாரோவந்த, தவமிகுமரசாந் தசரதன்றானே- மிகுந்ததபமுடைய வரசனானதசரதரோ, தன்னியனும் நானிலந் தன்னில் - உலகத்தில் பாக்கியவந்தனாகும், பவமுறுமியாவன் மனத்தினால் - பிறவியையடைந்த யாதொருவன் மனதினால், இந்தப்பார்த்திபன்பகையெனநினைக்கும்- இந்தமகாராஜனை பகைவனாக நினைக்கின்றானோ, அவமுறுமந்தவிராவணன்றானும்-அபஜெயமடைகின்ற அந்தராவணனும், அருள்செயப்படும் பாக்கியசாலி - இவ்விராமரால் கிர்பைசெய்யப்படுகின்ற பாக்கியவந்தனும்—எ-று. (கூஅ)

இவர் பிரிந்திடலாற் சூன்யமாஞ் சுவர்க்க மிழிதரு
குறைவடைந்துளது, உவமையி லாதிசேடனு மிவரோ
யுறுபிலத்திருந் திலக்குமனாய், இவ னுடன்வரலாற் றா
ழ்வடைந் திருந்த திசைக்கு மப்பாதாளலோகம், தவமி
குமிந்த மத்தியலோகஞ்சார்ந்ததுமேன்மையாம்புகழே.

இ-ள். இவர் பிரிந்திட்லாற் சூன்யமாஞ்சுவர்க்கம் - இவ்விராமர்நீங்கி யிருப்பதால் வெறிதாயிருக்கின்ற சுவர்க்கலோகமானது, இழிதருகுறைவடைந்துளது - இழிவானகுறைவடைந்திருக்கிறது, உவமையிலாதிசேடனுமிவரோ-ஒப்பில்லாதவாதிசேடனுமிவரோ, உறுபிலத்திருந் திலக்குமனாய் - அப்பாதளலோகத்திலிருந்து இலட்சுமணவடிவாக, இவனுடன்வரலால் - இங்கு இவருடன்வந்ததினால், தாழ்வடைந்திருந்த திசைக்குமப் பா

தாளலோகம் -அப்பாதாளலோகம் தாழ்வடைந்திருக்கின்றது, த வமிருமிந்த மத்தியலோகம்-மிக்கதப்முடைய விந்த பூலோகமானது, சார்ந்தது மேன்மையாம் புகழே - மேலானகீர்த்தியையடைந்திருக்கின்றது—எ-று. (௬௯)

இராம மாநாமம் பெற்றவதரித்த விவர் திருப்பாற்கடனடுவில், பராவிய தேவர் பணிசெய்து நிற்பப் பள்ளிகொண் மகாபுருஷன்காண், நிராமய ஞானனந்தவார்கடலாய் நிறைபர மாத்தும சொரூபி, விராவுமிந் திரிய மடக்கி யுள்ளத்தில் விளங்குறக் காண்பர் யோகிகளே.

இ-ள். இராமமாநாமம்பெற்றவதரித்த - இராமனென்னுமகத்தானதிருநாமம்பெற்றிருக்கின்ற, இவர்திருப்பாற்கடனடுவில்- இவர்திருப்பாற்கடலின்மத்தியில், பராவியதேவர் பணிசெய்துநிற்ப - துதிசெய்கின்றதேவர்கள் பணிவிடை செய்துகொண்டு நிற்க, பள்ளிகொண் மகாபுருஷன்காண்-அறிதுயிலமர்ந்த மகாபுருஷனேகும், நிராமயஞானனந்த வார்கடலாய் - நிராமயமான ஞானனந்தநிறைந்த சமுத்திரமாக, நிறைபரமாத்துமசொரூபி - பரிபூரணமான பரமாத்மாகாரமானவர், விராவுமிந்திரிய மடக்கியுள்ளத்தில் - பலவிந்திரியங்களையுமடக்கி யிதயத்தில், விளங்குறக்காண்பர் யோகிகளே - இவரையோகிகள் ஞானக்கண்ணுல்விளங்கக்காண்பார்கள்—எ-று. (௭0)

ஆகிய யாமோ விந்தமாராம னவரமாவுருவத்தைச் சொலவும், ஊகமா யன்பிற் றரிசனஞ்செயவு முரிமையேயம் பகவனுமிவனே, மாகமா ரகுமாராஜன் செய்பாப்

மாய்ந்திட வேருடன் களைந்தான், ஏகமாம் வசிட்டமு
னிவனேயெழுப்பி யிவன் விவகரித்திடப் புரிவாய்.

இ-ள். ஆகியயாமோ விந்தமாராமன் - நாங்களோவென்று
விந்தஇராமனது, அவரமாவுருவத்தைச்சொலவும்-சகளருபத்தை
துதிக்கவும், ஊகமாயன்பிற் றரிசனஞ்செயவு முரிமையேம் - அ
ன்பால் யூகித்துக்காணவுந் தகுதியுள்ளவர்களா யிருக்கின்றோம்,
பகவனுமிவனே - கடவுளானவிவரே, மாகமாரகுமாராஜன் செய்
பாபம் - விண்ணுலகடைந்த ரகுமகாராஜனது பாபங்கள், மாய்ந்
திடவேருடன்களைந்தான் - முற்றுந்தீர்ந்தொழியச் செய்தவர்,
(என்றுகேட்டிருக்கிறோம்)ஏகமாம்வசிட்டமுனிவனே அத்வை
தசொரூபமான வசிட்டமுனிவரே, எழுப்பியிவன் விவகரித்தி
டப்புரிவாய் - இவர்சமாதிவிட்டெழுந்து விவகாரஞ்செய்யும்ப
டிதயைசெய்யக்கடவீர்—எ-று. (௯௬)

வான்மீகிவாக்கியம்.

இவ்வணம்விஸ்வாமித்திரமுனிவனியம்பியேமௌ
னமாயிருப்பத், திவ்வியதேசார் வசிட்டமாமுனிவன்செ
ப்புவா னிராமனைநோக்கி, செவ்விய பாகு மகாபுருஷனு
மாஞ் சின்மயமாகிய ராமா,எவ்வயில் விசிராந்திக் கூற்று
மன்றுலெழுந் துலகவர்க்கின்ப மளிப்பாய்.

இ-ள். இவ்வணம்விஸ்வாமித்திரமுனிவனியம்பியே மௌ
னமாயிருப்ப-இவ்வாறு விஸ்வாமித்திரமுனிவர்கூறி மௌனமா
யிருந்தபோது, திவ்வியதேசார் வசிட்டமாமுனிவன் - பிரமதே
ஜசுடைய வசிட்டமுனிவர், செப்புவானிராமனைநோக்கி — இரா
மனைப்பார்த்துக் கூறுகின்றார், செவ்வியபாகுமகாபுருஷனுமாஞ்
சின்மயமாகியராமா-அழகியபுஜபலமுடைய மகாபுருஷோத்தம

ருகவும் சின்மயமாகவும் நிறைந்த இராமர், எவ்வயில் விசிராந்தி க்கற்றமன்றால்-துன்பமற்றவிசிராந்திக்கு இதுசமயமல்லவாதலால், எழுந்துலகவர்க் கின்பமளிப்பாய்-சமாதிவிட்டெழுந்து லோகத்தாருக்கு சுகந்தரக்கடவாய்—எ-று. இக்கவிமுதல் வசிட்டர் கூறுகின்றது. (எ௨)

யோகிகடமக்குச் சமாதியாதிக்க முதவிசெய் யுல
கசிந் தனைதான், ஏகபூரணமா யேற்படுமட்டு மிசைந்தி
டா நின்மலசமாதி, ஆகையான் மைந்தா வனித்தியமான
வர சிராச்சிய முதல்விஷையம், மாக தேவாதி காரியவ
திகாரமுஞ் செய்து மன்னுக சமாதி.

இ-ள். யோகிகடமக்குச் சமாதியாதிக்கம் - யோகிகளுக்குச் சமாதியிற்செல்வார்க்கு, உதவிசெய்யுலக சிந்தனைதான் - கொடுக்கின்ற லோகசிந்தனையானது, ஏகபூரணமா யேற்படுமட்டும் - நிறைவாகயேற்படுகிறவரையில், இசைந்திடாநின்மலசமாதி - நிருவிகற்பசமாதி கூடுவதரிது, ஆகையான்மைந்தாவனித்தியமான- ஆனதால் மகனே நிலையின்றிய, அரசிராச்சியமுதல்விஷையம்- அரசுசெய்கின்ற ராச்சியமுதலான விஷையங்களையும், மாகதேவாதிகாரியம்-விண்ணுடோரான தேவர்காரியங்களும், அதிகாரமுஞ்செய்து - இராச்சியாதிகாரங்களும் செய்தனுபவித்துப் பின்பு, மன்னுகசமாதி-நிருவிகற்ப சமாதிபெறக்கடவாய்—எ-று. (எ௩)

வான்மீகிவாக்கியம்.

குருவினு லிவ்வாறுரைத்திடப்பட்டுங் குறியறு வி
ராமத்தி லொன்றி, மருவிய ராமன் மௌனத்தி லிருப்ப
மதித்தந்த வசிட்டமா முனிவன், பொருவரு முடலிற்
சங்கற்பவடிவாய்ப் புகுந்துளசுழுமுனைநாடி, அருநெறி

யாலே யிதயத்தின் மேவி யவன்றனை வெளிப்படச் செய்தான்.

இ-ள். குருவின்விவ்வாறுரைத்திட்டப்பட்டும் - தமதாசாரியரா லிவ்வாறு கூறப்பட்டும், குறியறு பிரமத்திலொன்றி - சுட்டற்றபிரம சொரூபத்திற்கலந்து, மருவியராமன் மௌனத்திலிருப்ப - ஏகமாய்விளங்கிய இராமர் மௌனமாயிருக்க, மதித்தந்த வசிட்டமாமுனிவன் - வசிட்டமுனிவர் நிதானித்து, பொருவருமுடலில் - ஒப்பற்றசுந்தரமான தேகத்தில், சங்கற்பவடிவாய்ப்புகுந்து - ஆதிவாகிக சரீரத்தால் நுழைந்து, உளசுழுமுனைநாடியருநெறியாலே - அங்குள்ள சுழுமுனைநாடி மார்க்கமாக, இதயத்தின்மேவி-இர்தயாகாயத்திற்சென்று, அவன்றனைவெளிப்படச்செய்தான்-அவரைச்சமாதியினின்றுவெளிப்படுத்தினர்—எ-று. (தா-ம்) அவருட்புகுந்து - விலீனமாயுருகி லயித்திருக்கின்ற இராமரது ஜீவோபாதி லிங்கத்தைத் தடிக்கச்செய்து லிந்துக்குள்நுழைந்தகாற்று அதற்குள்ளிருக்கு முனையை வெளிப்படுத்துவதுபோல அவரை வெளிமுகப்படுத்தினரென்று கருத்து.

(அ-கை.) அவரை வெளிப்படுத்தும்போது. வெளிப்பட்டமுறைமையும் சிதாபாசத்தோற்றத்தால் க்ஷேத்திரபிரகாசம் வெளிவிஷயதரிசன முதலான கிரமத்தைக் கூறுகின்றார்.

தோன்றுமாதார சத்தியி னிது துன்னுமப்பிராணனில் மனதில், ஏன்றிடு சிதாபாசாம்சமாய் விளங்கியிவைகளை பிரகாசிக்கச் செய்யும், ஆன்ற ஜீவாம்ச மாகியராமனமர்நாடி யனைத்தினுஞ் சென்று; சான்ற விந்திரியங் காணங்கள் விளக்கித் தண்ணெனக் கண்களை விழித்தான்.

இ-ள். தோன்றுமாதாரசத்தியில் - முதல் பிராணாதிகளுக்கு வித்தாகிய ஆதாரசத்தியிலும், இனிது துன்னும்பிராணனில்-இனிதாகத்தோன்றும் பிராணனிலும்; மனதில்-பின்பு மனதிலும், என்றிடு சிதாபாசாம்சமாய்விளங்கி -- பொருந்திய சிதாபாச அம்சமாகப் பிரவேசித்தவராய், இயைந்தவை பிரகாசிக்கச்செய்யும்-கூடியதனா லவற்றைப்பிரகாசிப்பிக்கும், ஆன்றசிவமாம் சமாகிய ராமன்-சிறந்தசிவரூபியான இராமர், அமர் நாடியனைத்திலுஞ்சென்று - பிராணன் வழியாக சகலநாடித் துவாரங்களிலும் பிரவேசித்து, சான்ற விந்திரியங்கரணங்கள் விளக்கி - சகலவிந்திரியகரணங்களைப் பிரகாசிப்பித்து, தண்ணெனக்கண்களை விழித்தான் - தணிவாகக் கண்களைவிழித்தார்—எ-று. (௭௫)

மேன்மையார் வசிட்டர் முதற்பெரியோரை வெளி
தருகாட்சியிற் கண்டு, தானுயர்முத்த னாச்சர்வவிச்சை
தனைவிடுத் திருப்பதாற் செய்தல், ஊனமாய்த் தவிர்
தலெனுங்குணதோஷ முணர்ந்திட லவற்றினா லுண்
டாம்; பான்மையாங் கொள்கை விடுக்கையு மின்றிப் பா
ர்த்தனர் மௌனமா யிருந்தே.

இ-ள். மேன்மையார் வசிட்டர் முதற்பெரியோரை-மேன்மை பொருந்திய வசிட்டர்முதலான பெரியோர்களை, வெளிதருகாட்சியிற்கண்டு-பாஹ்யகாட்சியிற்கண்டு, தானுயர் முத்தனாச்சர்வவிச்சைதனைவிடுத்திருப்பதால்-தான் சீவன்முத்தனாக சகல இச்சைகளையும் விட்டிருப்பதால், செய்தல் ஊனமாய்த் தவிர்தலெனுங்குணதோஷம் - இதுசெய்யத்தக்கது இது விடத்தக்கதென்னுங் குற்றகுணமும், உணர்ந்திடல்-அறிதலும், அவற்றினாலுண்டாம் பான்மையாங்கொள்கை விடுக்கையுமின்றி - அவற்றினாலேற்ற கொள்கையும் விடுகையுமில்லாமல், பார்த்தனர். மௌனமாயிருந்தே - ஒன்றுங்கூறாதுபார்த்துக்கொண்டிருந்தார்-எ-று.

வசிட்டர்தாம் பின்னும் விளித்திடு வசனம் மன முறக் கேட்டிது குருவின், விசுத்தவாக்கியமென் றறிந் துமேற்றுறைதை மேலவர் வேண்டுகோ ளுணர்ந்து, நிசத் துள ராமச் சந்திரபகவா னிகழ்சமபாவமா யுரைக்கும், இசைத்தமா முனியே நின்பிரசாதத்தா லிலைவிதிவிலக் கெனக் குணர்ந்தேன்.

இ-ள். வசிட்டர்தாம் பின்னும் விளித்திடுவசனம்-வசிட்ட முனிவர் பின்னும் விளித்தவாக்கியம், மனமுறக்கேட்டிது குரு வின்-மனதிற் பொருந்தக்கேட்டு இதுகுருவினது, விசுத்தவாக்கி யமென்றறிந்து- பரிசுத்தவாக்கென்றறிந்து, மேற்றுறைதைமேலவர் வேண்டுகோளுணர்ந்து - தந்தைமுதலிய பெரியோர்களது வே ண்டுகையுமறிந்து, நிசத்துளராமச் சந்திரபகவா னிகழ்சமபாவமா யுரைக்கும்-உண்மையிற்கலந்திருக்கின்ற இராமச்சந்திரமூர்த்தி ச மபாவனையிலிருந்து கூறுகின்றார், இசைத்தமாமுனியேநின்பிர சாதத்தா லிலைவிதிவிலக்கெனக் குணர்ந்தேன் - இவண்கூறிய முனீஸ்வரரே நினதருட்பிரசாதத்தால் எனக்கு விதியும்விலக்கு ம் இல்லையென்றறிந்தேனென்றார்—எ-று. (எஎ)

ஆகினு நமது வாக்கியமென்று லற்பொடு செயத் தக்க தன்றோ, ஊகமா வேத வாகமபுராண முரைத்திடு ம் விதிகுருவாக்கியம், ஏகுறவிடுத்தல் விலக்கெனலாகு மெனச் சருவாத்துமதயாள, சாகரமான விராமனவ்வசி ட்டர் சரணபத்மந்தரித் துரைக்கும்.

இ-ள். ஆகினுநமது வாக்கியமென்றால் - ஆனாலும் நமது வாக்கியமென்றால், அற்பொடுசெயத்தக்க தன்றோ - அன்போ டுசெய்யத்தக்கதல்லவா, ஊகமாம்வேத வாகமபுராணம் - உத்தி யானவேதம் ஆகம புராண மிவைகள், உரைத்திடும் விதிகுரு வா க்கியம் - கூறப்பட்டது குருவாக்கியமே விதியென்றும், ஏகுற

விடுத்தல் விலக்கெனலாகுமென - குருவாக்கியந்தள்ளிவிடுதலே விலக்கென்றும் கூறப்படுமாதலால், சருவாத்துமதயாள சாகரமான விராமன் - சர்வசீவதயாபர சமுத்திரமாயிருக்கின்ற இராமர், அவ்வசிட்டர் சரணபத்மந்தரித்துரைக்கும் - அந்தவசிட்டமுனிவர் சாரணரவிந்தங்களைவணங்கி யுரைக்கின்றார்—எ-று. (எஅ)

இச்சபையுள்ள மகாசனங் கேண்மின் னெதாவுண்மை ஞானசித்தியினால், நிச்சயமாக நன்குற வுணர்ந்த நிகழ்சருவார்த்தமுஞ் சொல்வோம், உச்ச மங்களமுண்டாக நுங்கட்கிங் குயராத்ம ஞானத்தின் மிக்க, சொச்சமா மின்ப மிலையஃ துணர்த்துந் துறிகெழு குருவினுந் துணையில்.

இ-ள். இச்சபையுள்ள மகாசனங்கேண்மின் - இந்தச்சபையிலிருக்கின்ற சகலருங்கேளுங்கோள், எதாவுண்மை ஞானசித்தியினால் - எதார்த்தமான மெஞ்ஞானசித்தியினால், நிச்சயமாக நன்குறவுணர்ந்த - திரமாக நன்றாயறியப்பட்ட, நிகழ்சருவார்த்தமுஞ் சொல்வோம் - விளங்குகின்ற சர்வார்த்தங்களையுங் கூறுவோம், உச்சமங்களமுண் டாகநுங்கட்கிங்கு-உங்களுக்குமேலான மங்களகரமுண்டாகக்கடவது, உயராத்மஞானத்தின் மிக்க-மேலான ஆத்மஞானத்தின்மேற்பட்ட, சொச்சமாமின்பமிலை - சுத்தமானவின்பமில்லை, அஃதுணர்த்துந் துறிகெழுகுருவினுந் துணையில் - அந்தப்பரமஞானமுபதேசிக்குங் கீர்த்தியுள்ள குருவைவிட வுங்களுக்கு வேறுதுணையாவாருமில்லை—எ-று. (எகூ)

இங்குளார் யார்க்கு மீதுநிச்சயமே யெனச் சித்தர் முதலியோருரைப்பார், துங்கமாராம னின்பிரசாதத்தாற் சொல்லு மிச்சாஸ்த்ர சம்வாதம், சங்கையி லர்த்த முறு தியாயிற்று கடையறு சுகம்பெற நின்றுற், புங்கமா வசி

ட்ட முனிவரா லநுஞை பொருந்தியாம் போதுமுன்வா ல்போல்.

இ-ள். இங்குளார்யார்க்குமீது நிச்சயமேயென - இங்கிருக்கின்றயாவருக்கும் இது நிச்சயமாயிற்றென்று, சித்தர்முதலியோருரைப்பார் - சித்தர்முதலிய பெரியோர்களுரைக்கின்றார், நுங்கமாராம நின்பிரசாதத்தால் - மகத்தானஇராமா நினதுகிர்பையினுல், சொல்லுமிச்சாஸ்த்ர சம்வாதம் - இங்குச்கூறப்பட்ட சாஸ்த்ரசம்பாஷணையினது, சங்கையிலர்த்த முறுதியாயிற்று - சந்தேகமின்றி யதன்பொருள் ஸ்திரமாயிற்று, தடையறு சுகம்பெறுநீர்தடையற்ற பெரானந்தமடைவீராக, நின்றால் புங்கமாவசிட்டமுனிவரால் - தம்மிடத்திலும் மேன்மையான வசிட்டரிடத்திலும், அநுஞைபொருந்தியாம் போதுமுன்வரல்போல் - உத்திரவுபெற்றுக்கொண்டு முன்வந்ததுபோல போய்வருவோம்-எ-று.

வான்மீகவாக்கியம்.

இந்தவா றுரைத்துச் சபையுளோரெல்லா மேகுமுன் தங்கடம் மிருப்பில், எந்தையாமந்த ராமன்மாமுடியிலிலகுறு மலர்மழை பொழிந்த, அந்தமாரிவையெல் லா நுமக் குரைத்தே னன்புள பாரத்வாஜ மைந்த, பந்தமில் சுகத்தில் நெடிநுற வாழி பாரவிக்காவியம் வாழி.

இ-ள். இந்தவாறுரைத்துச் சபையுளோரெல்லாம் - சபையிலிருந்தயாவரும் இந்தப்பிரகாரஞ் சொல்லிக்கொண்டு, ஏகுமுன் தங்கடம்மிருப்பில் - தங்கள்தங்களிடத்துக்குச் செல்லுமுன், எந்தையாமந்த ராமன்மாமுடியில் - என்பிதாவாகிய அந்த இராமரதுமுடியின்மீது, இலகுறுமலர்மழைபொழிந்த-விளங்கும் மலர்மாரிபெய்தது,அந்தமாரிவையெல்லாம் நுமக்குரைத்தேன், அன்புளபாரத்வாஜமைந்த-பக்தியுள்ள புத்திரனுன பாரத்வாஜரே, பந்தமில்சுகத்தில் நெடிதுறவாழி - பந்தமற்றசுகத்தில் எப்

போதும் வாழக்கடவாய், பாரவிக்காவியம்வாழி - இந்த மகாசாஸ்திரமும் வாழ்ந்திருக்கக்கடவது—எ-று. (அக)

மேன்மையாம்வசிட்டர் வாக்கியபந்தி மேவுமிச்சாத்திரந்தன்னால், வான்புகழ் வாய்மை ரகுபதிசீவன் முத்தியை மன்னிய துரைத்தேன், பான்மையின் மிக்க வித்துவான்களுக்கும் பரமயோகியர்க்கு மப்பியசிக்கும், மான்மியமுளது குருகடாக்ஷத்தால் வழங்குனன்முத்திசேர் மார்க்கம்.

இ-ள். மேன்மையாம் வசிட்டர் வாக்கியபந்தி - மேலான வசிட்டரது வசனவரிசை, மேவுமிச்சாத்திரந்தன்னால் - பொருந்திய விந்தச்சாஸ்திரத்தால், வான்புகழ்வாய்மைரகுபதி-மேலானகீர்த்தியுடைய இரகுநாதன், சீவன்முத்தியை மன்னியதுரைத்தேன் - சீவன் முத்தியடைந்த சரிதத்தைக்கூறினேன், பான்மையின்மிக்க வித்துவான்களுக்கும் - பெருமையையுடைய வித்துவசனங்களுக்கும், பரமயோகியர்க்கு மப்பியசிக்கும் - பரமயோகிகளும் அப்பாயாசிக்கத்தக்க, மான்மியமுளது - மகத்துவமுடையது, குருகடாக்ஷத்தால் வழங்குனன்முத்திசேர் மார்க்கம் - ஆசாரியர் திருநோக்கத்தால் முத்தியடைகின்ற வழியுங்கிடைக்கும்—எ-று. (அஉ)

இவ்வணம் வசிட்ட முனிவர்க்கு மிராம விசைகெழூதோன்றற்கு நடந்த,செவ்விய சம்பாஷணைவிதி கேட்டோர் தெளியுமப் பொருளினை யுணர்ந்தோர், எவ்வகை யவத்தை யுடையவரோனு மிசைந்துள பாபங்கணீங்கித், திவ்விய வேதாந்தப் பொருண் முறையே தேர்ந் துயர் பிரமத்தை யடைவார்.

இ-ள். இவ்வணம் வசிட்டமுனிவர்க்கு மிராமவிசைகெழூ தோன்றற்குநடந்த-இவ்வாறு வசிட்டமுனிவருக்கும் கீர்த்தி

மிகுந்த இராமமூர்த்திக்கும்ரட்ந்த, செவ்வியசம்பாஷணைவிதிகேட்டோர் - சிறந்த சல்லாபமொழியைக் கேட்டவர்கள், தெளியுமப்பொருளினையுணர்ந்தோர் - தெளிவான வப்பொருளையுணர்ந்தவர்கள், எவ்வகையவத்தையுடையவரேனும் - எந்த மோகாவத்தையடைந்தவராகுனும், இசைந்துளபாபங்கணீங்கி - சேர்ந்தபாவங்களெல்லாமொழிந்து, திவ்வியவேதாந்தப் பொருண்முறையே - தெளிவுள்ள வேதாந்தார்த்தக் கிரமமாய், தேர்ந்துயர் பிரமத்தையடைவார் - தெளிந்துமேலான பரமசொரூபமாவார்கள்—எ-று.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திபாதாரவிந்தந்துணை.

இவ்வாறு வான்மீகமகாரிஷியினால் சொல்லப்பட்ட மகாராமாயணத்தில் தேவதூதப்புரோக்தமான முப்பத்திரண்டாயிரங்கிரந்தத்தில் பாலகாண்டத்தில் மோக்ஷோபாயமான நிர்வாணப்பிரகரணத்தில் ப்ரத்துவாஜ அநுசாஸனமென்னும் - ௧௨௭ - வது சருக்கமும், இராமவியுத்தாபனமென்னும் - ௧௨௮ - வது சருக்கமும், ஸ்ரீமதுபரமஹம்ஸபரிவ் ருஜகாசாரியரான ஸ்ரீ ஸர்வஞ்ஞ ஸரஸ்வதிபூச்சிய பாதர். இவர் சிஷியர் ஸ்ரீ இராமசந்திரஸரஸ்வதிபூச்சிய பாதர். இவர் சிஷியர் ஸ்ரீ கங்காதரேந்திரஸரஸ்வதி என்னும் ஸன்னியாசியினது சிஷியரான ஆனந்தபோதேந்திரசரஸ்வதி என்னும் சன்னியாசியினாலே செய்யப்பட்ட வாசிட்டதாற்பரியப் பிரகாசிகையென்னும் வியாக்கியானத்துக் கிணங்க பு.வெ. பொன்னையாமுதலியாரென்னும் சிவானந்தமூர்த்தியானபரமவித்துவான் தமிழ்க்கவிதையாகமொழிபெயர்த்துமேல்வியாக்கியானத்துக்கொத்தபடி உரையுஞ்செய்துவிளக்கினைத்தனர்

திருச்சிற்றம்பலம்.

சம்பூரணம்.

---

புதுவை—கலியுகவருஷ ௪௯௭௭—யுவவருஷ ஆனிமீ.

# செய்யுண் முதற்குறிப்பகராதி.

பரத்துவாஜ அநுசாஸனம் - கவி - ௫௰,

இராமவியுத்தாபனம் - கவி - ௮௩, வியாக்கியான - கவி - ௩,

ஆக - கவி - ௧௩௬.

முற்றிற்று.

சிவமயம்.

ஞானவாசிட்ட வமலராமாயணப்

# பிழைதிருத்தம்.

| பக்க. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| க | கூ | நாற்பதொன்பான் | நாற்பத்தொன்பான் |
| ங | க | பொருளை | பொருளைக் |
| ங | கக | கார்ப்பணயஞ் | கார்ப்பண்யஞ் |
| ,, | ககூ | சாரவர் | சார்வர் |
| ச | கஎ | தோய் | தோய்வ் |
| சா | ,, | சமஸாதனத்தில் | சமஸ்த்தானத்தில் |
| கரு | கூ | கொடையிற் | கோடையிற் |
| உஉ | ங | சார்ங்கதோர் | சார்ங்தோர் |
| ,, | க0 | பொட்டு | பொருட்டு |
| ,, | ககூ | உனச்குண்டா | உனக்குண்டா |
| உங | க0 | வியற்றுக | யியற்றுக |
| உசா | கச | இங்கும்போ | இங்குப்போ |
| உஎ | கூ | சக்த்தி | சக்தி |
| ,, | கசா | கிரகத்தாத் | கிரகத்தாற் |
| உகூ | உ | மூத்தர் | மூத்தர் |
| ஙஅ | கூ | கெட்டியென்று | கேட்டியென்று |
| சாக | சா | சிஷித்தருமம் | சிஷித்தகருமம் |
| சாஉ | உரு | அத்தியாதமீக | அத்தியாத்மீக |
| சாச | ங | பராதிய | பாராதிய |
| ,, | கஅ | சுரோத்ரோங் | சுரோத்ரங் |
| ,, | ககூ | இகுவை | ஜிகுவை |
| ,, | உசா | சுரோத்ரோம் | சுரோத்ரம் |
| சாரு | உ | இகுவை | ஜிகுவை |
| சாசா | கரு | முடியில் | முடிவில் |
| ரு0 | க | முறயரு | முயறரு |
| ருக | சா | வீறைக்கு | விறைவுக்கு |

| பக்க. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௫௨ | ௯ | சூககமாய் | சூக்கமாய |
| ,, | ௧௯ | சிநபாசம் | சிதாபாசம் |
| ௫௫ | ௬ | முன்றொடு | மூன்றொடு |
| ,, | ௧௩ | முன்றொடு | மூன்றொடு |
| ௫௬ | ௯ | வாக்யம் | வாகாயம் |
| ,, | ௧௫ | சினமாத்திர | சின்மாத்திர |
| ௫௭ | ௧௫ | தவ்வியாசிருத | தவ்வியாகிருத |
| ௫௮ | ௨ | முத்தருனெனை | முத்தருனேன |
| ௬௦ | ௨௦ | உம்பனாகு | உப்பனாகு |
| ௬௧ | ௯ | போலியான் | போல்யான் |
| ௬௩ | ௧௯ | முழுமுதுங் | முழுதுங் |
| ,, | ௨௨ | மடையதக்க | மடையத்தக்க |
| ௮௪ | ௭ | பாராது | பார்த்து |

பொருள்பேதியாது திருத்திக்கொள்க.